KALKI
28.7.96
ரூ.3.00

# கல்கி



சினிமாவுக்கு 100 வயது:
## என்ன சாதித்தோம்?



## அனிதா - ஆடல், அசத்தல், அதிரடி!





• தொடரில் சில காட்சிகள்

# நடிக்க வரும் நகைக் கடை!

அவன் ஒரு சூதாடி. தன் மனைவியின் தாலியையே அவன் தூங்கிக் கொண்டிருக்கும்போது, திருடிக் கொண்டு போய் வைத்து சூதாடுகிற அளவுக்கு மோசமானவன். காலையில் கண் விழிக்கிற மனைவி, தன் கழுத்தில் தாலி இல்லாதது கண்டு அதிர்ச்சியடைகிறாள். தாலி திருடிய கணவனுக்கு அவள் தரும் — அல்லது தனக்கே தந்துக் கொள்ளும் — புரட்சிகரமான தண்டனை, வெள்ளைப் புடைவை. ஏழு வருடங்கள் கழித்து கணவன் திருந்தும்போது வண்ணச் சேலைக்கு மாறுகிறாள்.

முகத்தில் 'நச்' சென்று குத்தும் இந்தச்

## ஆஹா, சந்தோஷம்!

இந்த இதழில் ஆபீஸ், மாமியார், அரசியல் ஜோக்ஸ் கிடையாது.... கிடையாது... கிடையவே கிடையாது!!





* சுகுமாரன்

சிறுகதையை எழுதி யிருப்பவர் பாலகுமாரன். டைட்டில் 'தாலிக்கொடி'.

இன்னொரு கதை: 'ஒட்டியாணம்' எழுதியிருப்பவர் அசோகமித்திரன். (கதை எழுதுமுன் லலிதா ஜுவல்லரியின் ஒர்க் ஷாப்புக்குக் போய் ஒட்டியாணம் செய்யப்படும் முறையை அரைநாள் கூடவே இருந்து கவனித்தாராம்.)

இப்படி அட்டிகை, மெட்டி, சங்கிலி கொலுசு, வளையல், மோதிரம், மூக்குத்தி, தாலிக்கொடி என்று பத்து ஆபரணங்களை வைத்து, எழுத்தாளர்களிடமிருந்து சிறுகதை களை ஸ்பெஷலாய் எழுதி வாங்கி, டெலி சீரியலாய் எடுத்திருக்கிறார்கள் லலிதா கம்யூனிகேஷன்ஸ் நிறுவனத்தினர். (லலிதா ஜுவல்லரியின் லேட்டஸ்ட் விரிவாக்கம்)

சன் டி.வி ஒளிபரப்புக்காகத் தயாரிக்கப் பட்டுள்ள இந்தப் பத்து வாரத் தொடருக்கு இசை*: இளையராஜா.

''இசைஞானி இசையமைத்த முதல் டெலிசீரியல் இதுதான். பதினைந்து நாட் களில் ரொம்ப ஈடுபாட்டுடன் இசை யமைத்துக் கொடுத்தது மட்டுமல்ல; ஏழெட்டு எபிசோடுகளில் அவராகவே கதைக்கு ஏற்ப நான்கு வரிகளில் கவிதை எழுதி, கடைசி காட் சியின் பின்னணியாகச் சேர்த்து, கதைகளுக்கே ஒரு அழுத்தம் கொடுத்து விட்டார்'' என் கிறார் தயாரிப்பில் முக்கியப் பங்கு வகித்த பத்திரிகையாளர் சாரதி.

''மத்திய தர, மேல்மட்ட மக்களைச் சென்றடைய இன்றைக்கு மிகச் சரியான மீடியம் சாடிலைட் டி.வி.தான். எனவே, டெலிவிஷன் தொடர்கள் தயாரிக்க எண்ணி னோம். எங்களுக்கு நகை வியாபாரம்தான் முதன்மை என்பதால் நகைகள் சம்பந்தப் பட்டதாய் ஆபரணக் கதைகளை உருவாக்கி யிருக்கிறோம்'' என்று கூறிய லலிதா ஜுவல்லரியின் எம்.டி.சுகுமாரனிடமிருந்து கறந்த இரண்டு உபரித் தகவல்கள்:

1. இந்த டெலி சீரியலில் நடிகைகள் முழுக்க முழுக்க ஒரிஜினல் தங்க நகைகளையே அணிந்து நடித்தனர்.

2. வாராவாரம் நிகழ்ச்சியில் கேட்கப்படும் கேள்விகளுக்கு, சரியான விடை எழுதும் அதிருஷ்டசாலிகளுக்குப் பரிசு: தங்க நாண யங்கள்!

சந்திப்பு: எஸ்.சந்திரமௌலி

---



''நாம ரெண்டு பேரும் என்னைக் காவது ஒரு நாள் கல்யாணம் செய்துப் போம்ன்ற நம்பிக்கை உங்களுக்கு இருக்கா சேகர்?''

''ஏன் இல்லை? எனக்கு எங்க வீட்லே பெண் பார்க்க ஆரம்பிச்சுட்டாங்களே. உங்க வீட்லே உனக்கு பிள்ளை பார்க்க இன்னும் ஆரம்பிக்கலையா?''

- குமார்

''நான் பயணம் செய்த பஸ் புளிய மரத்துல மோதினதுல என் முகத்துல லேசா அடிபட்டிடுச்சு''

''பஸ்கலதான் முதலுதவிப் பெட்டி இருந்திருக்குமே...?''

''நான் மோதிக்கிட்டதே அதுலதானே சார்!''

- வி ரேவதி





''இப்படி வரதட்சணை, சீர்வரிசை லிஸ்டோட எங்க 'மேட்ரிமோனியல்' பகுதியிலே நாங்க விளம்பரம் செய்யற வழக்கமில்லை... வேணும்னா சொல்லுங்க, 'ஷாப்பிங்' பகுதியிலே போடறோம்!''

- அதிக்



# ஒலிம்பிக் நியூஸ்!

## அட்லாண்டாவிலிருந்து :

அருணா ஸ்ரீநிவாசன்

அன்புள்ள கல்கி வாசகர்களே,

ஆணி அடிப்பதும், பூச்செடிகள் நடுவதும் ஒப்பந்தங்கள் கையொப்பமிடுவதும், நடமாடும் கழிப்பறைகளை ஆயிரக்கணக்கில் நிறுவுவதுமாக நூறாவது ஒலிம்பிக்ஸ் பந்தயத்துக்கு அட்லாண்டா தயாரான கதைகள், ஒலிம்பிக்ஸை விடவும் சுவாரஸ்யம்.

இந்த நகரின் பல்வேறு தரப்பு மக்களும் ஒரு சேர குதூகலத்துடனும், பரபரப்புடனும் வரவேற்ற நிகழ்ச்சி இது. ஒலிம்பிக் பந்தயத்தை நடத்தும் வாய்ப்பு என்பது வாழ்நாளில் ஒருமுறை மட்டுமே கிடைக்கும் சந்தர்ப்பம் அல்லவா? அட்லாண்டாவாசிகள் ஒவ்வொருவரும் இதில் தங்களுக்குத் தனிப்பட்ட பங்கும் பொறுப்பும் உள்ளதாகக் கருதி உழைத்திருக்கிறார்கள்.

இந்தியாவில் நடப்பது போல் இங்கேயும் இந்த சர்வதேசத் திருவிழாவையொட்டி அட்லாண்டாவுக்கு நிறைய வசதிகள் புதிதாகக் கிடைத்துள்ளன. "இந்த மேம்பாடுகள் எல்லாம் நமக்கு எதிர்பாராத போனஸ்" என்று ஒருபக்கம் மக்கள் பேசிக் கொள்ளத்தான் செய்கிறார்கள்.

இன்னொரு பக்கத்தில், "வி.ஐ.பி. விருந்தாளிகளுக்காக வீட்டைப் பார்த்துப் பார்த்து அலங்கரித்து புதுப்பிப்பது போல் அட்லாண்டா நகரம் முழுவதுமே செயல்பட்டுக் கொண்டிருக்கிறது" என்று பெருமையும் பூரிப்புமாகச் சொன்னார்கள். "வீட்டைப் புதுப்பிக்கும் நேரத்தில் ஏற்படும் அசௌகரியங்களையும் டென்ஷனையும் சகித்துக் கொள்வதில்லையா... அதே போல் இந்த அமர்க்களத்தையெல்லாம் பொறுத்துக் கொள்வதுடன் எல்லாம் ஒழுங்காக நடக்க பிரார்த்தனை செய்ய வேண்டியதுதான்" என்றார்கள்!



42000 அட்லாண்டாவாசிகள் ஒலிம்பிக்ஸ் பணிகளில் ஈடுபட்டிருக்கிறார்கள். பஸ்கள் ஓட்டுவது, மொழிபெயர்ப்பாளர்களாகச் செயல்படுவது, இஸ்ஸி (IZZY) என்ற ஒலிம்பிக் சின்னத்தை ஊர்வலமாக எடுத்துச் செல்வது, வெயில்தாளாமல் மயக்கமுறுபவர்களுக்கு முதலுதவி அளிப்பது – (இங்கே பகலில் வெயில் கொளுத்தும் – 30 முதல் 35 டிகிரி செல்ஷியஸ் வரை காயும்!) என்று எந்தப் பணியைச் செய்தாலும் மனமுவந்து சேவையாகத்தான் செய்து கொண்டிருக்கிறோம். கட்டணம் எதுவும் பெற்றுக் கொள்ளவில்லை.

## வாருங்கள், நம் கனவைக் கொண்டாடுவோம்!

போட்டி ஆரம்பிக்க மூன்று நாட்களே இருந்த சமயத்தில், புதுப்பிக்கும் பணிகளெல்லாம் முடியாதோ என்ற நியாயமான சந்தேகங்கள் எழுந்தன. பல சாலைகள் புதுப்பிக்கப்படாமலே இருந்தன. நகரின் ஹைலைட்டாக அமைக்கப்பட்ட ஒலிம்பிக் நூற்றாண்டு பூங்கா, கடைசி நிமிஷத்தில்தான் தயாராயிற்று.

"ஐய்யோ! உலகின் பார்வையில் அட்லாண்டா அசடு வழியுமே! உலகே நம்மைக் கேலி பேசுமே..." என்றெல்லாம் பதைத்துப் போனோம். ஆனால் எங்கள் நகரம் நீண்ட காலமாகவே விளம்பரம் விரும்பும் நகரமாகவும்,

தன்னைச் சிறப்பாக வெளியுலகுக்குக் காட்டிக் கொள்ளும் வித்தை அறிந்த நகரமாகவும் இருந்து வருகிறது. அதனால் பயங்கள் அவசிய மற்றவை என்பது பெரும்பாலோருக்குத் தெரியும்.

சர்வதேச ஒலிம்பிக் கமிட்டியை வற்புறுத்தி நூறாவது ஒலிம்பிக்ஸ் பந்தயத்தை நடத்தும் வாய்ப்பை நாங்கள் எப்படிப் பெற்றோம் என்று நினைக்கிறீர்கள்...? எல்லாம் வாசாலகம்தான்! அற்புதமான பொதுத் தொடர்பு, சுய விளம்பரம், நறுக்குத்தெறித்தாற்போன்ற அட்லாண்டா ஆதரவு கோஷங்கள் - இவையெல்லாம் எங்கள் நகரின் சரித்திரத்தோடு இழைந்த விஷயம்.

ஒலிம்பிக் பந்தயத்துக்குக் கூட slogan எழுதும் போட்டி வைத்தார்கள் - ஜெயித்த வாசகம் எது தெரியுமா...?

**'அட்லாண்டா : வாருங்கள், நம் கனவைக் கொண்டாடுவோம்!'**

என்ற வாசகம்!

அமெரிக்காவிலேயே அதிவிரைவாக வளர்ந்து வரும் நகரங்களுள் ஒன்று அட்லாண்டா. மக்கள் தொகை மூன்று மில்லியன். சாதாரண நாட்களிலேயே இங்கு போக்குவரத்துப் பிரச்னைகள் மிக அதிகம். ஒலிம்பிக் பந்தயங்களின் போது நகரம் எப்படியிருக்கும் என்று நீங்களே கற்பனை செய்து கொள்ளுங்கள்! ஆனால் விளையாட்டுகளைக் காண டிக்கெட் வைத்திருக்கும் பாக்கியசாலிகள் இந்தச் சிக்கல்களுக்கெல்லாம் அஞ்சவில்லை. சில தைரியசாலிகள், "கூட்டம் என்ன பிரமாத கூட்டம்! சர்வதேச ஜனத்திரளின் ஒரு பகுதியாக நாமும் இருந்து விட்டுப் போகிறோம். ஜாலியாக அனுபவிப்பதை விட்டுவிட்டு முனகலாமா...!" என்று நெரிசலையும் ரசித்துக் கொண்டிருக்கிறார்கள். பேய் கும்பலுக்குப் பயந்து வீட்டைப் பூட்டிக் கொண்டு நகரை விட்டு வெளியேறி விட்ட சிலரும் உண்டு!

உலகிலேயே மிக பிஸியான விமான நிலையம் எங்களுடையதுதான். ஒலிம்பிக்ஸுக் காக இன்னும் எக்கச்சக்க புது டெர்மினல்களை அமைத்து அமர்க்களப்படுத்தியிருக்கிறோம்.

உறுமும் இயந்திரங்களும் புல் தரைகளுக்கு நீர் சொரியும் தெளிப்பான்களும் ஓவர் டைமாக வேலை பார்த்ததில், சாலைகள் பளபளக்கின்றன; தோட்டங்களில் லில்லி மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. கோலாகலமாக ஒலிம்பிக்ஸ் நடக்கிறது. ஒவ்வொரு அட்லாண்டாவாசி வீட்டிலும் ஒரு படுக்கையறையாவது வெளியூர்க்காரருக்கு ஒதுக்கப்பட்டு விருந்தோம்பல் தடபுடல்படுகிறது!

## அண்ணா படும் பாடு!



**1985**-ல் அப்போதைய முதல்வர் எம்.ஜி.ஆர். திண்டுக்கல்லை தலைநகரமாகக் கொண்டு அண்ணா மாவட்டத்தை உருவாக்கினார். 1989-ல் கலைஞர் முதல்வரானதும் காஞ்சிபுரத்தை தலைநகரமாகக் கொண்டு அண்ணா மாவட்டத்தை உருவாக்கினார். 1991-ல் ஜெயலலிதா முதல்வரானதும் அண்ணா மாவட்டத்தை மீண்டும் திண்டுக்கல்லை தலைநகரமாகக் கொண்டு உருவாக்கினார். 1996-ல் முதல்வராக வந்த கலைஞர் காஞ்சிபுரத்தை தலைநகரமாகக் கொண்டு இப்போது அண்ணா மாவட்டத்தை ஏற்படுத்தியிருக்கிறார். இனி அண்ணாவை திண்டுக்கல்லுக்கு மாற்றுவது கொஞ்சம் கஷ்டம். திண்டுக்கல் இப்போது மன்னர் திருமலை மாவட்டத்தின் தலைநகர். மன்னர் திருமலை, நாயக்கர் சமூகத்தைச் சார்ந்தவர். சாதி பிரச்னை ஏற்படலாம்.

– எம். எஸ். குமார்




முன்னாளில் தூர்தர்ஷனில் மேட்ச் பார்த்து போய், பிறகு தனியார் தொலைக் காட்சிகளில் பார்த்ததும் போய், இனி காசு கொடுத்துப் பார்க்கிற சானல்களில் (Pay Channel) மட்டுமே பார்க்க முடியும் என்கிற நிலைமை வந்து விட்டது!

புண்ணியத்தைக் கட்டிக் கொள்பவர்கள் (வயிற்றெரிச் சலை!) ESPN டீவிக்காரர்கள்.

ஸ்டார் ஸ்போர்ட்ஸுக்குப் போட்டியாகத் தொடங்கப்பட்ட ESPN, முதலில் சன், ஸ்டார் போல சாதாரண தனியார் தொலைக்காட்சியாகத்தான் இயங்கி வந்தது. ஸ்டார் மூவிஸ் போன்ற 24 மணி நேர சினிமா சானல்கள், தமக்கெனத் தனியாகப் பணம் கொடுத்

# பணம் பிடுங்கும் தனியார் தொலைக்காட்சிகள்!

தால்தான் தம் ஒளிபரப்பைக் காண முடியும் என அறிவித்து, இயங்கத் தொடங்கியதைப் (சற்று வெற்றிகரமாகவே) பார்த்ததும் ESPNக்கும் ஆசை வந்து விட்டது.

கடந்த மே மாதத்தில் தன்னையும் ஒரு 'Pay Channel' ஆக அறிவித்துக் கொண்டது ESPN. இதன்படி, ESPN நிகழ்ச்சிகளைப் பெறுவதற்கு, கேபிள் ஆபரேட்டர்கள் ஒரு குறிப்பிட்ட தொகையை அந்நிறுவனத்துக்குக் கப்பமாக மாதந்தோறும் கட்டிவர வேண்டும்.

கேபிள் ஆபரேட்டர்கள் சந்தாதாரர்கள் தலையில் கை வைத்தார்கள்.

இதிலும் ESPN தனது சாமர்த்தியத்தைத் துல்லியமாக வெளிப்படுத்தியிருக்கிறது! சாதாரண தருணங்களில் இந்த அதிரடி நடவடிக்கையை எடுத்திருந்தால் 'நீயுமாச்சு, உன் நிகழ்ச்சிகளுமாச்சு' என்று, 'வேண்டாம்' என சொல்லி விடுவார்கள் எனக் கணக்கிட்டு, இந்தியா, இங்கிலாந்து கிரிக்கெட் மேட்ச் நடக்கிற சமயமாகப் பார்த்து இப்படி அதிரடி அறிவிப்பை வெளியிட்டிருக்கிறது.

கிரிக்கெட் ரசிகர்கள் எப்படியும் மேட்ச் பார்க்க விரும்புவார்கள்; இந்தச் சமயத்தில் தன்னை Pay Channel ஆக அறிவித்துக் கொண்டால் திட்டியவாறேயாவது பணம் கொடுத்து விட்டு மேட்ச் பார்ப்பதில் கவனம் திருப்பி விடுவார்கள் எனத் திட்டம் போட்டது ESPN.

ஆனால் நடந்தது வேறு. மும்பையில் ESPNக்குக் கடும் எதிர்ப்பு! 'மேட்ச் பார்க்காவிட்டாலும் பரவாயில்லை; காசு கொடுத்துத்தான் ESPN ஒளிபரப்பைப் பெற வேண்டும் என்ற அவசியமில்லை' என்கிற ரீதியில் அங்கே கேபிள் ஆபரேட்டர்கள் ஒன்று கூடி ESPN ஐப் புறக்கணிப்பதாக முடிவு செய்து விட்டார்கள்!

இதற்கு ESPN மசிவதாக இல்லை! தன் கொள்கையில் பிடிவாதமாக இருக்கிறது.

எனினும் கிரிக்கெட் சீசன் தொடங்கி, தொடர்ந்து இந்த வருடம் முழுவதும் மேட்சுகள் இருப்பதால் எப்படியும் வழிக்கு வந்து விடுவார்கள் என்று ESPN நினைக்கிறது போலும்.

இது பற்றி நம் ஊர் கேபிள் ஆபரேட்டர்கள் என்ன நினைக்கிறார்கள்?

தி.நகர் வடக்கு உஸ்மான் ரோடில் இயங்கி வரும் வனிதா விஷன் கேபிள் நிலையத்தின் உரிமையாளர் வீரராகவனைச் சந்தித்தோம்.

"ESPN பே-சேனல் ஆனது பற்றி எங்கள் சந்தாதாரர்களுக்கு நிறைய அதிருப்தி. கூடுதலாகப் பணம் தர வேண்டும் என்றால் சண்டை பிடிக்கிறார்கள். அதே சமயம் கிரிக்கெட் மேட்ச் பார்க்காமல் இருக்கவும் அவர்கள் விரும்புவதில்லை. கூடுதல் தொகையுடன் நிறைய சாபத்தையும் சேர்த்துத் தருகிறார்கள்.

''மும்பையில் தோன்றியுள்ள ESPN எதிர்ப்பு, அனைத்து மாநில கேபிள் டீவி ஆபரேட்டர்களிடமும் தோன்ற வேண்டும். இந்த விஷயத்தில் ஒருமித்த கருத்தோடு ESPNஐ எதிர்த்தாலொழிய வேறு வழியில்லை. அல்லாதபட்சத்தில் ESPNஐ ஒரு முன்னுதாரணமாகக் கொண்டு மற்ற அத்தனை தனியார் தொலைக்காட்சிகளும் தம்மை Pay Channel ஆக அறிவித்துக் கொள்ளத் தொடங்கிவிடும். கேபிள் ஆபரேட்டர்கள் ஒற்றுமையுடன் இணைந்து செயலாற்ற வேண்டிய தருணம் இது'' என்றார்.

இந்த பே-சேனல் விஷயத்தில், தனியார் டீவிக்கள், கேபிள் ஆபரேட்டர்களை ஒரு 'கட்டாய வசூலர்'களாகப் பயன்படுத்துவதில் தமக்கு உடன்பாடில்லை என்றும் சொன்னார் வீரராகவன்.

"சந்தாதாரர்களில் சிலர் ESPNஐ விரும்பலாம். சிலர் வேண்டாம் எனலாம். யாருக்காக நாம் செவி சாய்ப்பது? யாரை திருப்திப்படுத்தினாலும் வேறொரு சாராரின் அதிருப்திக்கு ஆளாக வேண்டித்தான் இருக்கிறது. ஈ.எஸ்.பி.என் போல் அனைத்து தனியார் டீவிக்களும் வசூலிக்க ஆரம்பித்தால் மக்கள் அவை மீது அதிருப்தியும் வெறுப்பும் கொள்ளத் தொடங்கி விடுவார்கள். அவை என்னதான் தரமான நிகழ்ச்சிகளைத் தருவதாக இருந்தாலும்!" என்று வருத்தப்பட்டார்.

— எம்மாரென்



''ஒரே பாணியிலே நாலு பத்திரிகை நடத்தறீங்களே, எப்படி?''

"இதுக்கு முன்னே 'ஜெராக்ஸ்' கம்பெனி வெச்சு நடத்தின அனுபவம்தான்!''

— குமார்

●● பல ஆண்டுகளுக்கு முன் வெளிவந்த என் மொழி பெயர்ப்பு நூல் ''சங்கமம்'' (பொற்றெக்காட்டின் சிறுகதைகள்) தேவை. உதவுக.

**– ர.சௌரிராஜன் (சௌரி)**
**293, 41வது தெரு, செக்டார் 8,**
**கே.கே.நகர், சென்னை-78.**

●● நன்கு இயங்கும் நிலையில் உள்ள **Record Player** இருக்குமானால் தகுந்த விலை கொடுத்து வாங்கிக் கொள்வேன்.

**– ஏ.விசாலம்,**
**எச். 28/24, அஷ்டலக்ஷ்மி கார்டன்,**
**பெசன்ட்நகர், சென்னை - 90.**

●● கோவையில் **B.Sc Agri** படிக்கிறேன். நாலு வருடங்களுக்கும் தேவையான புத்தகங்கள், நோட்ஸ் பாதி விலையில் தேவை. தபால் செலவு ஏற்கிறேன்.

**– என்.ராஜலட்க்ஷ்மி,**
**211, கடலூர் சாலை,**
**விருத்தாசலம் - 606 001.**

●● என் தையல் இயந்திரத்தின் ஒரு பாகம், தவறி விழுந்ததில் தகர்ந்து விட்டது. **Singer Automatic Model 319 K -** தேவையான பாகம்: **Bobin case holder.** கிடைக்குமானால் பணம் கொடுத்துப் பெற்றுக் கொள்கிறேன்.

**— T. சுந்தர்,**
**D-26, N.E.E., தில்லைநகர், திருச்சி - 18.**

●● **A.M.I.E** படித்து வருகிறேன். **Section A, Section B** வினாத்தாள்கள் இருக்குமானால் விவரம் தெரிவித்தால் தக்க சன்மானம் கொடுத்துப் பெற்றுக்கொள்கிறேன்.

**– வி. வேங்கடராமன்,**
**கிரங்குடி, மாரிக்குடி (அ),**
**தஞ்சை (மாவ) 612 504.**

●● டெக்ஸ்டைல் பிரிண்டிங் தொழிலைக் கற்றுக்கொள்ள ஆர்வமாய் இருக்கிறேன். இது குறித்து தொழிற்பயிற்சி நிலையம் இருக்குமானால் தகவல் தெரிவிக்கக் கோருகிறேன்.

**– எஸ்.எம். தர்மராஜ்,**
**4/223 B, ஆர்.வி.தெரு,**
**புதியம்புத்தூர் (அ) 628 402**
**சிதம்பரனார் (மாவ)**

●● **Max Gunther** எழுதிய **Luck Factor** என்னும் நூல் தேவை. விலை விவரம் தெரிவிக்கவும்.

**- D. குமார்,**
**14/1798 முதலியார் தெரு,**
**கரந்தை, தஞ்சாவூர் 613 002.**



# பாலம்

●● விரலால் செயலிழக்கச் செய்யும் "தட்டு வர்மம்" கலையைக் கற்க ஆவல். இலவசமாக அல்லது குறைந்த கட்டணத்தில் சொல்லித் தருபவர் இருந்தால் தொடர்பு கொள்ளவும்.

**– ஆர்.பி. அரவிந்தன்,**
**தலைமை காசாளர்,**
**ஸ்டேட் பாங்க் ஆஃப் திருவாங்கூர்,**
**சுசீந்திரம் - 629 704.**

●● நெல்லை ப.ராமசாமி மொழிபெயர்ப்பில் ருஷ்ய நாவல் "தாய்" தேவை. புத்தகத்தின் நிலை, விலை குறித்து எழுதவும்.

**– எஸ். பரமசிவன்,**
**எல்.ஐ.சி.**
**சாத்தூர் - 626 203.**

●● ரெடிமேட் நைட்டீ, ஜிம்பீஸ், பெட்டிக்கோட் போன்றவை தயாரித்துக் கொடுக்கிறோம். முதலீடு செய்ய விரும்புவோர் தொடர்பு கொள்ளவும்.

**– ஆர்.சரஸ்வதி,**
**துர்க்கா நகர், சைட் நெ.26,**
**சிறுவாணி மெய்ன் சாலை,**
**கானம்பாளையம்,**
**கோவை-10.**

●● கல்கி புராணமும் அல்லோபநிஷத்தும் தமிழ் அல்லது ஆங்கில உரையுடன் சம்ஸ்கிருத மூலத்துடன் தேவை.

**- M.I.L. அலி,**
**பிளாட் T3, சல்மா அபார்ட்மெண்ட்,**
**ஜானகிராம் தெரு,**
**சென்னை - 33.**

●● 22.5.96 அன்று மாலை 5.30 மணிக்கு திண்டுக்கல்லிலிருந்து கிளம்பி மதுரை வந்து சேர்ந்த நல்லமணி பேருந்தில், 27 புகைப்படங்கள் கேட்பாரற்றுக் கிடந்தன. உரியவர்கள் தொடர்பு கொள்ள முகவரி:

**– கு. பாலசுப்பிரமணியன்,**
**4/244, பொன்னி தெரு.,**
**சேவகன் செட்டியார் காலனி,**
**ஆத்திகுளம்,**
**மதுரை - 625 014.**

*(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது. ஆ-ர்)*

# ரம்பா:

# ரெ.மு ரெ.பி

தேனாம்பேட்டை யிலிருந்து பாண்டிபஜார் போகும் சாலை. விஸ்தார மாகக் கிளை பரப்பிக் கொண்டிருந்த மரங்களில் ஒன்றின் அடியில் உட் கார்ந்து, 'காத்திருந்து காத் திருந்து காலங்கள் போகுதடி' என்று பாடிக் கொண்டிருந்த தண்டபாணியைத் தற்செய லாகப் பார்த்ததும் அதிர்ச்சி அடைந்தேன். என் 'குதிரை'யை ஓரம் கட்டி, "என்ன தண்டபாணி, இப்படி ஒரு கோலம்?" என்றேன் பதைத்து.

வண்டி அழுக்கைச் சுமந்து கொண்டிருந்த சட்டையும் நிறம் மாறிய ஜீன்ஸூம் போன வாரத்தி லிருந்தே சிரைக்காத தாடியும் கலைந்த தலையும் சிவந்த விழியுமாக ரயில் பிச்சைக் காரன் போல இருந்தான்.

என்னைப் பார்த்ததும், "நல்ல காலம் பொறக்கப் போவுது! நல்ல காலம் பொறக்கப் போவுது!" என் றான்.

"தொழிலை மாத்திட்டியா தண்டபாணி?"

"ஆமா! நானே நடிச்சி, நானே டைரக்ட் பண்ணி, அடுத்த தீவளிக்கு ஒரு படம் வுடறதா இருக்கேன்."

"போடு சக்கை! துட்டு? நீயே நோட்டு அடிக்கப் போறியா? சின்னம்மாவுக்குக் குடுத்தா மாதிரி ஏ கிளாஸெல்லாம் உனக்குத் தர மாட்டாங்க.



• ரம்பா

பெண்டு நிமித்திருவாங்க!"

"அடப் போய்யா! சவுத்ரி இருக்கக் கவலை எதற்கு?" என்றான்.

"யாரு? ஆர்.பி. சவுத்ரியா?"

"சாட்சாத்!"

"உன்னை வெச்சி அவர் படம் எடுக்கப் போறாரா?"

"நான் முயற்சி பண்ணிட்டிருக்கேன்."

"இப்படி ஆபீஸ் வாசல்ல குந்திட்டிருக்கறதுதான் முயற்சியா?" என்றேன்.

"இது ஒருவித நூதன முயற்சி. லிவிங்ஸ்டன் ஜெயிக்கலியா?" என்று பொடி வைத்தான்.

"என்னது?"

லிவிங்ஸ்டன்பா! வில்லன் கம் கதாசிரியர்! தெரியாது?"

"அவருக்கென்ன? இப்ப சுந்தரபுருஷன் எடுத்திட்டிருக்காரில்லை?"

"அதான்! எப்படி கிடைச்சதுங்கற அந்த சான்ஸ்? நம்ம மெத்தட்தான்! ஆறு மாசம்! பொழுது விடிஞ்சி பொழுது போனா இங்க வந்து சவுத்ரி ஆபீஸ்ல உட்கார்ந்துடுவாராம். தினம் ஒரு கதை! ஆபீஸ் பாயைக் கேட்டால் அவனே இவர் சொன்னதா நூறு கதை சொல்றான். சவுத்ரி ஒண்ணும் மசியறதா தெரியலை. கதை வேணும்னா எடுத்துக்கறேன். வேற யாராவது நடிக்கட்டும்னாராம்."

"அப்புறம்?"

"இவரு விடலை. தானே நடிச்சி, தானே டைரக்ட் பண்ணணும்னு உடும்புப் பிடியா இருந்தாராம்.

"ஒரு மனுஷன் எத்தனை நாளைக்குத்தான் கல்லாவே இருக்க முடியும்? தினசரி ஆபீஸ் வந்தா இவரைத்தான் முதல்ல பார்க்க வேண்டியதா இருந்ததாம். சரி, போனா போகட்டும்னு சுந்தரபுருஷனை ஓகே பண்ணி, ஆரம்பிச்சிட்டாராம்."

"அதே மாதிரி நமக்கொரு சான்ஸ் வரா தான்னு நீ இங்க வந்து தவம் இருக்கியாக்கும்."

"அதே."

"கதையெல்லாம் ரெடியா?"

"அது கிடக்குது. ஹீரோயினா ரம்பாவைப் போட்டுடலாம்னு இருக்கேன். என்ன சொல்ற?"

"சரிதான். லிவிங்ஸ்டனோடவே நடிக்க மாட்டேன்னு தகராறு பண்ணிச்சாம் அந்தப் பொண்ணு?"

"அதெல்லாம் ரெ.மு. காலத்துல!"

"ரெ.முன்னா?"



• 'எங்க சின்னபொண்ணு' : படுத்தியபாடு

"ரெய்டுக்கு முன்னால. இப்ப ரெ.பி. அம்மணி படு கொயட்! வளசரவாக்கம் கார்டன்ல சிவசக்தி ஷூட்டிங்ல இருந்தப்ப நாலு நாள் முன்னாடி பார்த்தேன்! என்னா சாந்தம்யா! டைரக்டர் கூப்பிட்ட உடனே வந்து, கேட்டபடி நடிச்சி, போகச் சொன்னதும் போய், வரச் சொன்னதும் வந்து... ஒத்துழைப்புத் திலகம்னு யூனிட்ல பட்டமே குடுத்துருக்காங்க."

"அப்படிப் போடு! என்ன பட்ஜெட்ல படம் முடிக்கற ஐடியா?"

"சுமாரா ஒரு பத்துக் கோடி!"

"போடா பேய்! நீ உருப்பட்டா மாதிரி தான்."

"ஏன் இச்சா?"

"நேத்திக்குத்தான் ஒரு நியூஸ் கேள்விப்பட்டேன். சமீப காலத்துல பெரிய பட்ஜெட் படம் ஒண்ணு கூட உருப்படலையாம். வரிசையா





ஊத்தி மூடிக்கிச்சாம். இந்தியன் கூட மெட்ராஸ்ல ஓடுதே தவிர மொபசல்ல தூக்க ஆரம்பிச்சிட்டாங்களாம். விழுப்புரம், திருவண்ணாமலையில எல்லாம் நாலாவது வாரம் காத்து வாங்குதாம். அதனால மக்கள், முப்பது, நாற்பது ரூபாயில படத்தை முடிக்கிற ஐடியாவுக்கு மறுபடி வந்துட்டாங்களாம். 'பூவே உனக்காக'வோட சக்ஸஸ் ஒரு கூடுதல் காரணம்!"

"யார் சொன்னாங்க?"

"யாரோ! இன்னொரு நியூஸ் கேளு. வேலூர் டாக்டர் ஒருத்தர், படம் எடுக்க ஆசைப்பட்டு, பத்து லட்சத்துல ஒரு படம் எடுத்து முடிச்சிட்டதா பேசிக்கறாங்க!"

"அட, உனக்குக் கூட உலகம் தெரிஞ்சிருக்கே?"

"பின்ன? உன்னை மாதிரி மரத்தடியில தவம் கிடக்கறவனை மட்டும் நம்பிட்டிருந்தா பூவா யாரு போடறதாம்?"

"வுடு. அதென்ன, வேலூர் ஜெயில் விஐபிகள் பத்தின படமா?"

"சேச்சே. காதலிச்சவன் இறந்துடறதால, ஒரு பெண் விதவைக் கோலம் எடுத்துக்கறா. அப்புறம் அவ படற கஷ்டங்கள்தான் 'எங்க சின்னப் பொண்ணு' கதை."

"மெய்யாவா பத்து லட்சத்துல முடிச்சுட்டாங்க?"

"பின்ன? ஆனா ஒண்ணு. கதைப்படி அந்தப் பொண்ணு கஷ்டப்பட்டாலும் ஷூட்டிங்ல டைரக்டரும் புரொட்யூசரும் தான் அந்தப் பொண்ணால கஷ்டப்பட்டிருக்காங்க."

"யாருய்யா பொண்ணு?"

"அபிராமி. நாட்டுப்புறப் பாட்டுல சிவகுமாருக்குத் தங்கையா வருதே."

"அட, அந்தப் பட்சியா? நாட்டுப்புறப் பாட்டுலியே கஸ்தூரிராஜா கண்ணுல விரல் குடுத்து ஆட்டிடுச்சியா. முதல்ல கஸ்தூரிராஜா இதைத்தான் ஹீரோயினா போடறதா இருந்தாராம். அடிக்கடி டேக்கா குடுத்துட்டு ரூட் மாத்திட்டே இருந்ததால, வெறுத்துப் போயி, கதையை மாத்தி, இதை தங்கச்சி ஆக்கிட்டு, குஷ்புவை ஹீரோயின் ஆக்கிட்டதாப் பேச்சு. இதெல்லாம் தெரியாம ஏ.எஸ். பிரகாசம், தன்னோட புதுப்படத்துக்கு இந்தப் பொண்ணை ஹீரோயினா போட்டே ஆகணும்னு நினைச்சி இப்ப அட்ரஸ் தேடிட்டிருக்கறதா கோடம்பாக்கத்துல சொல்றாங்க."

"ஐயோ பாவம்!"

"விடு. ஒரு கிசுகிசு சொல்றேன். எழுதறியா?"

"விளையாடறியா? கல்கி ரீடர்ஸ் கறுப்புக் கொடிப் போராட்டம் ஆரம்பிச்சிடுவாங்க."

"யாருக்கும் வலிக்காத கிசு கிசுய்யா! கேளு. அஞ்செழுத்து ஹீரோவோட நாலெழுத்துக் காதல் மனைவி, உண்டாயிருக்காங்களாம்."

"சான்ஸே இல்லை. இதெல்லாம் எழுத முடியாது."

"முழுக்கக் கேளு. அவரோட அஞ்செழுத்து டான்ஸ் அப்பாவுக்கு இந்தக் காதல் பிடிக்கலைன்னுதானே இவர் வீட்டை விட்டுத் தனியா போனார்? இப்ப இந்த அஞ்செழுத்து ஹீரோ அப்பாவாகறதால, ஹீரோவோட அஞ்செழுத்து அப்பா கொஞ்சம் மனசு மாறி, அஞ்செழுத்துப் பையனோட நாலெழுத்துக் காதலியை ஏத்துக்கலாமான்னு யோசனையில இருக்காராம்!"

"இப்ப சென்னை - 17ல உன்னைப் பார்க்கறேன். அடுத்த தடவை சென்னை - 10ல பார்ப்பேன்னு நினைக்கறேன். வரட்டுமா?"

— கிச்சா



"எங்களுக்குத் திருமணமாகி 20 வருஷமாகுது டாக்டர். திருமணத்தப்ப எனக்கு 30 வயசு. இவளுக்கு 25 வயசு!"

"அது சரி. இப்ப என்ன பிரச்னை சொல்லுங்க?"

"எனக்கு 50 வயசு ஆயிடுச்சு. இவ இன்னமும் 25 வயசுன்னே சொல்றா. எப்படி டாக்டர்?"

— குமார்

● ● ●

"போலி ஷாம்பு தயாரிச்சவனை கைது பண்ணி உள்ளே தள்ளிட்டாங்களாம்..."

"எப்படி?"

"அவன்தான் இஷ்டத்துக்கு அந்த ஷாம்புவுல, 'புரோட்டீன்ஸ், மினரல்ஸ், கார்போஹைட்ரேட், வைட்டமின் பி-1 முதல் பி-20 வரை உள்ளது'ன்னு விளம்பரப் படுத்தியிருந்தானே!"

— சீர்காழி வி. ரேவதி



# சுஜாதா பக்கம்



தமிழிலக்கணத்தில் பெயரெச்சம், வினையெச்சம் என்பதெல்லாம் படித்திருப்பீர்கள். எச்சம், Infinitive என்று ஆங்கிலத்தில் சொல்வதற்கு ஈடான இலக்கண வார்த்தை. பெயரெச்சத்தைப் பயன்படுத்தும்போது நல்ல எழுத்தை விரும்புகிறவர்கள் கொஞ்சம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இல்லையேல் அர்த்தம் தடம் புரண்டுவிடும். 'நன்றாகப் படித்த பையன்' என்பதில் 'படித்த' என்பது பெயரெச்சம். இதில் குழப்பம் இல்லை. ஆனால், 'நன்றாகப் படித்த நமச்சிவாயத்தின் பையன்' என்றால் சந்தேகம் வருகிறது. 'நமச்சிவாயத்தின் நன்றாகப் படித்த பையன்' என்றால் வாக்கியம் அவ்வளவு அழகாக இல்லை. பெயரெச்சத்துக்கு முன்பு பெயர்ச் சொற்களையும் இடை, உரிச் சொற்களையும் அடுக்கும்போது வருகிற வம்பு இது. பல எழுத்தாளர்கள் (நான் உட்பட) இவ்வாறு எழுதுவதைப் பார்த்திருப்பீர்கள்.

'வலதுகையில் வாட்சு கட்டிய பெண்ணுடன் வந்திருந்த நாய்க்குட்டி' என்றால் சிரமமில்லை. வாட்சு கட்டியது பெண்தான் என்பது. ஆனால் 'கட்டிய' பின் ஒரு கமா போட்டுப்பாருங்கள்!

இதனால்தான் 'அவன் பெயரை வைத்துக் கொண்டாடின என் நல்ல சிநேகிதனே நீ ஏன் குடிப்பதை நிறுத்தக் கூடாது' என்று படிக்கும்போது அவன் பெயரைக் கொண்டாடினது வண்ணதாசனா, அவர் சிநேகிதரா என்று சந்தேகம் வருகிறது. இந்தக் குழப்பத்தை சுற்றுப்பட்ட வாக்கியங்களை வைத்து தீர்த்துக் கொள்ளலாம் என்றாலும் அந்த இடத்தில் ஒரு சின்ன தடுக்கல்; ஒரு தயக்கம் ஏற்படுவது நிஜமே.

வண்ணதாசன் சிறப்பாக உரைநடை எழுதக் கூடியவர். இயல்பாக ஒரு வேகத்தில் எழுதும்போது, இலக்கணப் பொருத்தம் பார்க்க எந்த எழுத்தாளனுக்கும் சமயமிருப்பதில்லை. எழுத்தின் அவசரமும் எண்ணங்களின் அவசரமும் இலக்கணத்துக்காகக் காத்திருப்பதில்லை.

ஆனால் திரும்பப் படிக்கும்போது இதை, 'என் நல்ல சினேகிதனே அவன் பெயரை வைத்துக் கொண்டாடிய நீ குடிப்பதை நிறுத்தக் கூடாதா' என்று சந்தேக நீக்கம் செய்யும்போது, வாக்கியத்தில் ஒரு இழப்பு ஏற்படுவதும் உண்மைதான். இதற்கு என்னதான் தீர்வு?

என்னைப் பொறுத்தவரை கட்டுரைகள் எழுதும்போது இவ்வகைக் குழப்பங்கள் இல்லாதவாறு திருத்துவதை முக்கியமாகக் கருதுகிறேன். கவிதையோ, சிறுகதையோ எழுதும்போது நடை, தொனி போன்றவை இலக்கணக் கட்டாயங்களை விட முக்கியமாக இருக்கலாம். கட்டுரைகளில் பொருள் தெளிவு மிக முக்கியமானது. அதுவும் ஆராய்ச்சிக் கட்டுரைகளிலும், அறிவியல் கட்டுரைகளிலும் நீண்ட வாக்கியங்களையும் கொச்சைகளையும் தவிர்க்க வேண்டும். பெரும்பாலும் செயப்பாட்டு வினையைத் தவிர்க்க வேண்டும். 'பற்ற வைக்கப்பட்டால் வெடிக்கும்' வேண்டாம். பற்றவைத்தால் வெடிக்கட்டும். அங்கவஸ்திரம், அப்யாசம், ப்ரயாசம், போஜனம், அனுஷ்டானம் போன்ற 'எத்னிக்' வார்த்தைகளைத் தவிர்த்து மேலாடை, பயிற்சி, முயற்சி, உணவு, கைக் கொள்ளுதல் போன்ற தமிழ் வார்த்தைகளைப் பயன்படுத்துவது கட்டுரைகளின் நடுநிலைமைக்கு முக்கியமாகும். கட்டுரையாளரின் சமூக அடையாளங்கள் கட்டுரையில் வெளிப்படும்போது அதன் குறிக்கோள் திசை திரும்பிவிடும். அதே போல் கட்டுரையாளர்களின் விருப்பு வெறுப்புக்கள் அவருடைய நடுநிலைமையை பாதிக்காமல் பார்த்துக் கொள்வது முக்கியம். தேவநேயப் பாவாணர் ஒப்பியல் மொழி நூலிலும் வேர்ச்சொல் ஆராய்ச்சியிலும் சிறந்தவர்தான். ஆனால், ''என்னன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்'', ''ஆவற்கு நீரென்றிரப்பினும்'' போன்ற குறட்பாக்கள் பார்ப்பன ஒழுக்கத்தை மட்டும் கண்டிப்பனவாகும் என்று எழுதும்போது அவருடைய வெறுப்பு வெளிப்படையாகத் தெரிகிறது.

கட்டுரைகளில் மிக முக்கியம் அவை சுருக்கமாக இருப்பது. கட்டுரைகளை படிக்கவைப்பதே மிகவும் அரிதான காரியமாக இருக்கும்போது, பதினெட்டுப் பக்கம் பொடி எழுத்தில் இருந்தால் முதல் பத்தியிலேயே மூடிவைத்து விடுவார்கள். ஒரு கட்டுரைக்கு அதிகப்படியான அளவு மூன்று பக்கம். குறைந்த அளவு நான் சொல்ல வேண்டியதில்லை.

(மீண்டும் அடுத்த வாரம்)

# இந்திர தனுசு

## 30 கொம்பு சீவிய காளை!

நெடு நெடுவென்று உயர்ந்து கிடந்த மதில்கள் உறுதியாக இருந்தன. முப்பதடிகளுக்கு ஒன்றாக, மேலே செல்ல படிகள் அமைக்கப்பட்டிருப்பதையும், மேலே உலவிய வீரர்களின் எண்ணிக்கை அளவுக்கதிகமாகவே இருப்பதையும் கவனித்தான் ஆதித்யன். கீழ்ப்பகுதியில் பந்தங்களின் ஒளியில் பளபளத்து அடையாளம் காட்டியவை ஆயுதசாலைகளாக இருக்க வேண்டுமென்பதையும், பொத்தப்பிக்குப் பின்புலத்தில் உதவும் அந்தப் பலமான கரம், வீரர்களை மட்டுமின்றி ஏராளமாக ஆயுதங்களையும் அளித்திருக்கிறதென் பதையும் புரிந்து கொண்டான்.

நதியை அணைத்து ஓடிய மதில்கள் வடக்கில் சற்று தூரம் சென்றபின் நின்று விட்டன. பாறைகளும் புதர்களும் அடர்ந்து எழுந்து நின்ற மலைப்பகுதியே அதன் பிறகு அரணாக அமைந்திருந்தது. அரண்மனையும் மற்ற மாளிகைகளும்கூட மலையை ஒட்டியே அமைக்கப்பட்டிருப்பதையும் கவனித்தான் ஆதித்யன்.

மலைச்சரிவை ஒட்டிய





மாளிகையொன்றில் ஆதித்யன் தங்குவதற்கு ஏற்பாடு செய்த கோட்டைத்தலைவன், மன்னனிடம் அறிவித்து விட்டு வருவதாகக் கூறிச் சென்றான். அவன் அகன்றதும் மாளிகையின் முன்னும் பின்னும் ஆராய்ந்தான் விஜயன். "இளவரசே, நம்மை அபாயம் சூழ்ந்திருக்கிறது. மாளிகையைச் சுற்றிலும் காவல் பலப்படுத்தப்பட்டிருக்கிறது. பொத்தப்பியின் மன்னன் மிகவும் மூர்க்கனென்று கேள்வி. சிறு சந்தேகம் எழுந்தாலும் நம்மை ஒழித்து விடுவான். தவிர, என்னையும் இங்குள்ள சோழ நாட்டுப் பரிசாரகர்கள் நன்றாக அறிவார்கள். எவரேனும் கவனமின்றி ஒரு வார்த்தை கூறினாலும் பின்பு தப்புவதென்பது குதிரைக் கொம்புதான்" என்றான்.

ஆதித்யனின் செவிகளில் விஜயனின் வார்த்தைகள் விழுந்தனவே தவிர, அவன் சிந்தனை கலைவதாகவே தெரியவில்லை.

முதல் ஜாமம் இறுதியில் மன்னனிடமிருந்து அழைப்பு வந்தது. குறுகிய இரு வீதிகளின் வழியே ஆதித்யனை அழைத்துச் சென்ற வீரன், அரண்மனையின் மூன்று சுற்றுக்களையும் கடந்து, இறுதியாக மண்டபமொன்றின் உள்ளே செல்லுமாறு வேண்டினான். சுத்தமாக இழைக்கப்பட்டு மண்டபத்தின் மேற்கூரையைத் தாங்கிய

விஷ்வக்சேனன்

கருங்கல்தூண்கள் மண்டபத்திலிருந்த சர விளக்குகளைப் பிரதிபலித்துப் பளபளத்தன. தூண்களின் உச்சியில் மட்டும் யாளிகள் செதுக்கப்பட்டு, மேற்கூரையைச் சித்திரங்கள் பல அலங்கரித்துக் கொண்டிருந்தன. அறையின் சுவர்களில் பலவகையான ஆயுதங்கள் ஊசலாடின. அந்த அறைக்குள் வீரர்களோ பணிப்பெண்களோ காணப்படாததைக் கவனித்த ஆதித்யன், அது ஒற்றர்களை விசாரிக்கும் அந்தரங்க அறை என்பதையும் புரிந்து கொண்டான்.

மண்டபத்தின் மறுகோடியில் நீண்டு கிடந்த மஞ்சத்திலமர்ந்து ஆதித்யனையே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த மனிதனை சற்றுக் கழித்தே கவனித்தான் ஆதித்யன். அவன் உடைகளையும், தோரணையையும், அவன் வலது கரத்தில், மன்னர்கள் பட்டமேற்கும்போது அணியும் மந்திரக் கவசம் சிறு சங்கிலியில் பிணைக்கப்பட்டு ஆடியதையும் கவனித்து, அவன்தான் பொத்தப்பியின் மன்னன் மண்மசித்தனாயிருக்க வேண்டுமென்பதையும் கணித்தான். வலுவாகவே தெரிந்த அவன் புஜங்களும் கரங்களும் அவனுக்குப் போர்ப் பயிற்சி தீவிரமாக இருப்பதை அறிவித்தாலும் முழங்கையில் தொடங்கி தோள்கள் வரை தெரிந்த வாள் வடுக்கள் அவன் போரில் அதிக எச்சரிக்கையில்லாதவன் என்பதையும் தெரிவித்தன.

"பொத்தப்பியின் புதிய மன்னருக்கு வணக்கம்!" என்ற ஆதித்யனை, எதிரில் அமருமாறு சைகை செய்த மண்மசித்தனின் விழிகளில் இலேசாக வியப்பு தெரிந்தது.

"நான் புதிதாக முடி சூட்டினேனென்பது உனக்கு எப்படித் தெரிந்தது?" - மண்மசித்தனிடமிருந்து முதலில் கேள்வியே வந்தது. அவன் தன்னைப் பற்றி விசாரிப்பதையும், தான் யாரென்பதை அறிமுகம் செய்து கொள்வதையும் தவிர்க்க, ஆதித்யன் வீசிய முதல் அஸ்திரம் பலனளித்து விட்டது.

"மன்னா, நான் தங்களைச் சேர்ந்தவன் தானா என்பதைத் தாங்கள் இந்தக் குறுகிய நேரத்திற்குள் உறுதி செய்து கொண்டிருக்க இயலாது. அப்படி முழு நம்பிக்கைக்கு ஆளாகாதவர்கள் இப்படி அந்தரங்க அறையில் தனித்து சந்திப்பது மன்னர்கள் வழக்கமில்லை. மேலும்....

"மேலும் என்ன?"

"தங்கள் வலதுகரத்தில் பட்டமேற்கும் போது கட்டப்படும் மந்தரக்கவசத்தின் மஞ்சள் நூல்கள் இன்னும் புதிதாகத் தெரிகின்றன" என்றான் ஆதித்யன்.

"உண்மைதான்!" என்று ஒப்புக் கொண்ட மண்மசித்தனின் வியப்பு அதிகமாகியிருந்தது. அடுத்து ஒலித்த அவன் கேள்வியிலும் சற்று




மரியாதை கூடியிருந்தது.

"நீங்கள் காஞ்சியிலிருந்து வருவதாகக் கோட்டைத் தலைவர் கூறினார்?"

பொத்தப்பியன் மன்னன், கோட்டைத் தலைவன் கூறியவற்றை அப்படியே ஏற்றுக் கொண்டிருக்கிறான் என்பதையும், எளிதில் உணர்ச்சி வசப்படுபவன் என்பதையும் புரிந்து கொண்ட ஆதித்யன், தான் பேச வேண்டிய முறையையும் அணுக வேண்டிய வழியையும் தீர்மானித்துக் கொண்டு மெள்ள தன் வலையை வீச ஆரம்பித்தான். கண்டகோபாலனின் பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே மண்மசித்தன் சித்தத்தில் பெரும் ஆத்திரம் உருவெடுப்பதையும் ஆதித்யன் புரிந்து கொண்டான்.

முட்டாளைப் புகழ்ந்து பேசியும், வீரனிடம் அவன் வீரத்தை உயர்த்திப் பேசியும், கயவர்களைக் கைப்பொருள் கொடுத்தும், அறிவாளியிடம் உண்மையைக் கூறியும், காரியங்களைச் சாதிக்க வேண்டுமென்னும் தமிழ்ப் பழமொழியை நன்கு அறிந்திருந்தான் ஆதித்யன். கோட்டைத் தலைவன் உளறிவிட்ட ரகசியத்தினால் பளிச்சிட்ட உண்மைகளையும், மண்மசித்தனின் முரட்டுத்தனமாக ஆத்திரம் கொள்ளும் போக்கையும் முழுமையாகப் பயன்படுத்திக் கொள்வதே உசிதமென்று தீர்மானித்துக் கொண்டதால், அவனது கேள்விக்கு நிதானமாக பதிலளிக்க ஆரம்பித்தான். அவன் கேள்விக்குப் பதிலாக, "மன்னா, காஞ்சியில் கண்ட கோபாலரின் நிலை இன்னும் உயரும் ஸ்திதியில் இருக்கிறது. படைபலமும் உயர்ந்திருக்கிறது" என்றான்.

"விளக்கமாகக் கூறுங்கள்" மண்மசித்தனிடம் குழப்பம் தெரிந்தது.

"இதில் விளக்குவதற்கு அதிகமில்லை மன்னா. நீங்கள் திரட்டிக் கொண்டிருக்கும் படையைப் பற்றியும், திட்டமிட்டிருக்கும் தாக்குதலைப் பற்றியும் ஏற்கனவே அறிந்திருக்கிறார். அது மட்டுமல்ல...."

"வேறென்ன?"

"உங்களுக்கும் உதவ முன்வந்திருப்பவருக்கும் அபாயம் காத்திருக்கிறது!"

"காகதீய மன்னருக்கும், இளவரசிக்கும் அபாயமா?" - கோட்டைத் தலைவன் கூறிய ரகசியத்தை முழுவதுமாகப் போட்டு உடைத்து விட்ட மண்மசித்தன் முகத்தில் வியப்பும் ஆத்திரமும் தெரிந்தது.

காகதீய மன்னன் உதவுவதன் உள்நோக்கத்தை கணப்பொழுதில் ஊகித்துவிட்ட ஆதித்யன், "மன்னா, கண்டகோபாலருக்குப் பதிலாகத் தங்களைக் காஞ்சியில் அமர்த்த காகதீய மன்னர் உத்தேசித்திருப்பதையும் கண்டகோபாலர் எப்படியோ அறிந்து தக்க முன்னேற்பாடுகள் செய்திருக்கிறார்" - என்றான்.

ஆதித்யன் விசிறி விட்ட ஆத்திரத்தின்



ஜ்வாலை, மன்மசித்தனிடம் இன்னும் உயரத் தொடங்கியது. "மன்னரை எதிர்க்குமளவிற்குக் காஞ்சியில் படைகள் இருக்கிறதா?" என்றான் அவன் ஆத்திரம் குரலில் தொனிக்க.

"படைகள் காஞ்சியில் மட்டும் இல்லை..."

"வேறெங்கு இருக்கின்றன?"

"காளத்தியில். படைத் தலைவர் பிரதாபருத்திரர் தலைமையில் அங்கும் படை திரட்டப் பட்டிருக்கிறது!"

"காளத்தியின் படைப்பிரிவைப் பற்றி நான் அறிவேன். -ஆனால்...."

"மன்னரையும் உங்களையும் எதிர்க்க அவை போதாதென்று புதிய உறவுகளையும் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார் கண்ட கோபாலர்"

"புதிய உறவுகள் என்றால்....?" மன்மசித்தனின் புருவங்கள் ஒன்று கூடின.

"பாண்டியர்கள் கொங்கு நாட்டிலிருந்தும், சோழ நாட்டிலிருந்தும் போசளரை விரட்டி விட்டார்கள். அடுத்து சோழ நாட்டையும் பாண்டியர்கள் தாக்க முற்படலாமென்பதால் சோழ மன்னர் மீண்டும் கண்ட கோபாலரின் உதவியை நாடியிருக்கிறார். கண்டகோபாலரும் சோழர்களுடன் ஒப்பந்தம் செய்து கொண்டார்"

"சோழர்களுடன் ஒப்பந்தமா?" - மன்மசித்தன் இதை அடியோடு நம்பவில்லையென்பதை அவன் முகம் உணர்த்தியது.

பதிலுக்கு, கண்டகோபாலன் காளத்தியின் படைத்தலைவனுக்கு அளித்த ஓலையை எடுத்து நீட்டினான் ஆதித்யன்! சோழ நாட்டுக்கு உதவச் செல்ல, படைகளுடன் வரும்படி உத்தரவிருந்தது அதில்! கண்டகோபாலனின் கையொப்பத்தையும் முத்திரையையும் கவனித்து மீண்டும் குழலுக்குள் அடைத்த மன்மசித்தனின் சித்தம் எரிமலையாயிருந்தது.

"படை பலமற்ற சோழ நாட்டைப் பிறகு பகிர்ந்து கொள்ளவும் திட்டமிட்டிருக்கிறார் கண்டகோபாலர். காகதீய மன்னரால் அபாயம் நேர்ந்தால் சோழ மன்னரின் ஆதரவு கண்டகோபாலருக்கு முழுமையாக இருக்குமென்பது ஒப்பந்தம்" என்று இன்னும் விசிறினான் ஆதித்யன்.

ஆரம்ப காலத்தில் பொத்தப்பியிலிருந்து விரட்டப்பட்டு, காகதீய மன்னன் தயவால் காஞ்சிக்கு மன்னனான கண்டகோபாலன் இப்பொழுது வளமிக்க சோழ நாட்டின் ஒரு பகுதியையும் அடைந்து விடுவதை மன்மசித்தனால் ஏற்றுக் கொள்ளவே இயலவில்லை.

அவன் மனத்திலோடிய எண்ணங்களைப் புரிந்து கொண்ட ஆதித்யன், தனது இறுதி அஸ்திரத்தைப் பிரயோகிக்கத் தொடங்கினான்.

"மன்னா, உங்கள் எதிர்ப்பை கைவிட்டு கண்டகோபாலருடன் சேர்ந்து நீங்களும் உதவினால் உங்களைத் தொடர்ந்து தனக்கு உட்பட்ட சிற்றரசாக இருக்க அனுமதிப்பதாகவும் அவர் எண்ணியிருக்கிறார். இணங்க மறுத்தால்...."

"இணங்க மறுத்தால்?" மன்மசித்தன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன.

"மறுத்தால் இரு ஆண்டுகளுக்கு முன் உங்கள் தந்தையும் நீங்களும் ஒடுக்கப்பட்டதைப் போல் ஒடுக்கப் படுவீர்கள். காஞ்சியின் சித்திரச் சாலையில் இருக்கும் ஓவியத்தை பொத்தப்பியில் சிலைகளாகவே நிரந்தரமாக இருக்கும்படி வடித்து விடப் போவதாகவும் கூறினார்!"

"ஓவியமா? என்ன ஓவியம் அது?" மன்மசித்தனின் விழிகளில் கனல் தெரிந்தது.

ஆதித்யன் கச்சையிலிருந்து அந்தச் சீலை வெளிப்பட்டது. மண்டியிட்டுக் கிடந்த மன்மசித்தனையும் அவன் தந்தையையும் வெகு அலட்சியமாகப் பார்த்த கண்டகோபாலனின் ஒரு கால், அவர்கள் மணி முடி மீது பதிந்திருப்பது. உருவிய வாளுடன் கம்பீரமாக நின்றிருந்தான் கண்டகோபாலன்.

மன்மசித்தனின் உக்கிரம் முழுதாக வெடித்தது. மஞ்சத்தை விட்டு வேகமாக எழுந்தவன், அதைப் பிடுங்காத குறையாகப் பறித்தான். விழிகள் கோவைப் பழமாகச் சிவந்து கிடக்க, பற்கள் அரைபடும் ஒலி தெளிவாகக் கேட்டது. கசங்கிய சீலையைக் கரத்தில் பிடித்தபடி தட்தட்டென்று அறையில் உலவியவன் "இனி யாருடைய உதவியையும் எதிர்பார்க்கப் போவதில்லை. நானே சென்று காளத்தியிலிருக்கும் படைகளை அழித்துவிட்டு, காஞ்சிக்கு செல்கிறேன்" என்றவன் கரங்களைத் தட்டி வாயிலில் நின்ற வீரனை அழைத்தான். "நீ உடனே சென்று கோட்டைத் தலைவனையும், உப தலைவர்களையும் நான் அழைத்ததாகச் சொல்" என்று உத்தரவிட்டான்.



## அருள்வாக்கு

ரொம்பவும் உசந்த முறை, பண எண்ணமே இல்லாமல் நடக்கிற குருகுல கல்விதான். பரம த்யாகிகளாக வயிற்றைக் கட்டி, வாயைக்கட்டி, வாழத் தயாராக, வித்யை ப்ரசாரம் ஆக வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் போதிக்கிறவர்கள் நடத்தும் குருகுலத்துக்கு எதுவும் ஈடாகாது. இப்படிப் பட்டவரின் அறிவு விசேஷத்துடன் மனஸ் விசேஷமும் சேர்வதால் அப்போதுதான் சிஷ்யர்களுக்கு மிகவும் உயர்ந்த வித்யாவிலாஸம் உண்டாகும். ஆனால், இவன் வயிற்றைக் கட்டிக் கொண்டாலும் சிஷ்யனாக இருக்கிற இள வயசுக்காரனின் வயிறு வாடப்படாதே! அத்யயனம் செய்த ப்ராமணன் என்றால் நிச்சயமாக அவனுக்கு மான்யமாக ஸொத்து இருக்கும் என்ற பழங்கால நிலை இப்போது இல்லையே! தனக்கே 'ததிங்கிணதோம்' போடுகிற வேத பண்டிதர், சிஷ்யனை வேறு எப்படிப் பராமரிப்பார்? இங்கேதான் சிஷ்யனின் பிக்ஷாசர்யம் கை கொடுக்கிறது. அவன் பிக்ஷை எடுத்தே தன்னுடைய பாட்டைக் கவனித்துக் கொண்டுவிட வேண்டும். அது மட்டுமல்ல. தனக்காக நாலு வீட்டுக்குப் போய் பிக்ஷை கேட்க வேண்டுமென்றால், வாத்யாருக்காக இன்னம் நாலு வீட்டுக்குப் போகவேண்டும். அவருக்குப் பக்குவமான (சமைத்த) ஆஹாரம் பிக்ஷையாகக் கிடைக்கக் கூடாதாகையால், அவருக்கானதை அரிசி, பருப்பு, காய்கறி என்று வாங்கி வர வேண்டும்.

கல்வி அளிப்பது ஒன்றே நோக்கமாயிருக்கிற த்யாகி வாத்யாரைப் போல, கல்வி பெறுவது ஒன்றே நோக்கமாயிருக்கிற த்யாகி மாணவன்தான் இப்படி பிக்ஷாசர்யம் செய்து குருகுலவாஸம் செய்வான்.

'இம்மாதிரி எல்லாம் இந்தக் காலத்தில் யாராவது கிடைப்பார்களா? இதென்ன கார்யத்துக்கு உதவாத பேச்சு?' என்று நினைக்கலாம். அதற்காக உத்தமமான ஐடியல்களை வாயாலாவது சொல்லி, ஞாபகப்படுத்தக்கூட குருப்பட்டம் கட்டிக் கொண்டவன் தவறி விடக் கூடாது என்பதால்தான் சொல்கிறேன்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

ஆத்திரத்திலும் சங்கடத்திலும் தத்தளித்த மன்மசித்தன், பிறகு ஆதித்யனைத் திரும்பியும் பார்க்கவில்லை. "நீங்கள் செல்லலாம்" என்று விடை அளித்தான் திரும்பிப் பாராமலே.

மன்னன் அழைப்பை அறிந்து உபதலைவர்களுடன் விரைந்து வந்த கோட்டைத் தலைவன் அந்தச் சித்திரத்தைக் கண்டதும் மென்று விழுங்கினான். ''பிரபு... இந்தச் சித்திரம்... இது... காஞ்சி... இளவரசி'' என்று குழறினான் திகைப்பு விரவிய முகத்துடன்.

"கோட்டைத் தலைவரே! கூறுவதைத் தெளிவாகக் கூறுங்கள்...." இரைந்தான் மன்மசித்தன்.

தலையைத் தொங்கவிட்டுக் கொண்ட கோட்டைத் தலைவன் முகத்தில் சந்தேகம் பலமாகப் படர்ந்திருந்தது. ''மன்னா, காஞ்சியிலிருந்து வந்தவர் இதை அளித்திருக்க வேண்டும். அவரை இதற்கு முன்பாக காகதீயர் தலைநகரில் நம் வீரர்கள் பார்த்ததில்லையென்றும் உடன் இருப்பவன் சோழ ஒற்றர் படைத் தலைவனென்றும் நம் வீரர்கள் கூறுகிறார்கள்'' என்றான் அவன்.

கோட்டைத் தலைவன் எழுப்பிய சந்தேகத்திற்கு ஒரு கணத்திற்கு மேல் சித்தத்தில் இடமளிக்கவில்லை மன்மசித்தன்! "அவசியமானால் அந்த இருவரையும் காவலில் வைத்து விடுங்கள். உடனே நம் வீரர்களை அணிவகுக்க ஏற்பாடுகள் செய்யுங்கள். இப்பொழுதே நாம் செல்ல வேண்டும்!"- மன்மசித்தனது உத்தரவு கணவேகத்தில் வந்தது. மறு பேச்சின்றிக் கிளம்பிய கோட்டைத் தலைவன், ஆதித்யனையும் விஜயனையும் காவலில் வைக்க வீரர்களை அனுப்பிவிட்டு, படைகளை சித்தமாக்குவதில் முனைப்பானான்.

தனது அறைக்குத் திரும்பிய ஆதித்யனை வரவேற்ற விஜயன், "இளவரசே, கோட்டைத் தலைவன் ஏதோ சந்தேகிப்பதாகத் தெரிகிறது. இருமுறை வந்து என்னை விசாரித்துச் சென்றான். அதிருக்கட்டும். மன்னனுடன் பேசினீர்களா?" என்றான்.

"ஆம் விஜயா, மன்மசித்தன் பெரும் ஆத்திரக்காரனாயிருக்கிறான்" என்ற ஆதித்யன், நடந்தவற்றை விளக்கினான். அனைத்தையும் கேட்ட விஜயனின் முகத்தில் விஷமம் படர்ந்தது. மெள்ள நகைத்தவன், "இளவரசே, இதைத்தான் சோழ நாட்டில் கொம்பு சீவி விடுவது என்பார்கள்" என்றான் நகைத்தபடியே!

அவன் நகைப்பு பாதியில் நின்றது! சாளரத்தின் வழியே பார்வையைச் செலுத்தியவன், இருபதுக்கும் குறையாத வீரர்கள் வந்து கொண்டிருப்பதைக் கவனித்தான். "இளவரசே! நீங்கள் கொம்பு சீவியதற்குப் பலன் அதோ வந்து கொண்டிருக்கிறது" என்று அறிவித்தான் இன்னும் பலமாக நகைத்தபடி!

(தொடரும்)

# KALKI SHOPPING PAGE

ஊழல் குற்றச்சாட்டு
மோசடி வழக்கு
செல்வாக்கு
தொர்...
தொர்...
எதிர்ப்பாளர்கள்
ஆதரவாளர்கள்



1996 ஜூலை 28
தாது ஆடி 13
மலர் : 54
இதழ் : 52

**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## த.மா.கா. மாநாடு தவறவிட்ட வாய்ப்புகள்!

**மீ**ண்டும் ஒரு மாநாடு கண்டிருக்கிறது திருச்சி...!

வாக்களித்தது போலவே, ஆடம்பரம் தவிர்த்து, நற்பெயர் வாங்கிக் கொண்டிருக்கிறார் தமிழ் மாநில காங்கிரஸ் தலைவர் மூப்பனார்.

பெருந்திரளாக வந்த கூட்டமும், வெறுமே வேடிக்கை பார்க்கவோ, கோஷம் போட்டு கூலி வாங்கிக் கொண்டு போகவோ வரவில்லை என்பது மிகத் தெளிவாகத் தெரிந்தது.

தொடங்கி 105 நாட்களே ஆன ஒரு கட்சியில் முப்பது லட்சம் உறுப்பினர்கள் பதிவுசெய்து கொண்டிருக்கிறார்கள். இந்த எண்ணிக்கை சீக்கிரமே ஐம்பது லட்சத்தை எட்டும் என்று அதன் தலைமை சொல்வதையும் நம்ப முடிகிறது.

தமிழக அரசியலில் இது ஒரு புதிய திருப்பம். திராவிட கட்சிகளுக்கு ஒரு மாற்று தேடிக் கொண்டிருந்த தமிழக மக்களின் நம்பிக்கை, த.மா.காவை நோக்கித் திரும்பியுள்ளதைப் பார்க்கிறோம்.

இதனை த.மா.கா. தலைமையும் உணர்ந்து, செப்டம்பருக்குள் உட்கட்சித் தேர்தல் நடத்தப்படும் என்று ஆரோக்கியமான வாக்குறுதி வேறு அளித்துள்ளது. தொண்டர்களுக்கு உற்சாக மூட்டும் வகையில் 'மலைக்கோட்டையிலிருந்து சென்னை கோட்டைக்குப் போவோம்' என்று




முழங்கியுள்ளது.

இதன் மூலம், தி.மு.க. தோழமை கட்சிதான் என்றாலும் ஒரு கட்டத்தில் த.மா.கா. அதற்குப் போட்டியாக மாறும் என்பதை உணர்த்தியுள்ளது.

இவையெல்லாம் வரவேற்கத்தக்க நடவடிக்கைகள்தாம்.

ஆனால், 'தேசிய நோக்குடைய மாநில கட்சி' என தன்னை அழைத்துக் கொள்ளும் ஒரு கட்சி, தனது முதல் மாநாட்டில் என்ன கொள்கைகளை முன்வைத்தது, என்னென்ன தீர்மானங்களை நிறைவேற்றியது? என்று அலசிப் பார்த்தால் ஏமாற்றமே மிஞ்சுகிறது. மாநில நலனுக்கும், விவசாயிகள், பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் நலனுக்கும் பாடுபடுவோம் என்பன போன்ற சில வழக்கமான, மேம்போக்கான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டதோடு சரி.

'வலுவான இந்தியா; வளமான தமிழகம்' என்ற த.மா.காவின் அற்புதமான இலக்கை அடைவதற்குரிய வழிகள் மாநாட்டில் இனங்காட்டப்படவில்லை. அத்தகைய இலட்சிய நிலையை எய்த வேண்டுமானால், காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரையிலான எத்தனையோ பிரச்னைகளுக்குத் தீர்வு காணப்பட்டாக வேண்டும்.

ஜனத்தொகை கட்டுப்பாடு தொடங்கி, கல்வி விரிவாக்கம் வரை, ஏராளமான சமுதாய நலத் திட்டங்கள், யுத்தகால அடிப்படையில் மேற்கொள்ளப்பட வேண்டும்.

தொழில் - வர்த்தகக் கொள்கைகள், ஆட்சியில் இருப்பவர்களின் ஆசாபாசங்களுக்கேற்ப ஊசலாடாமல் தெளிவாக வகுக்கப்பட்டு, ஆணி அறைந்தாற்போல் பின்பற்றப்பட வேண்டும்.

இந்த விஷயங்கள் குறித்தெல்லாம் தமிழ் மாநில காங்கிரஸ் மாநாட்டில் மூச்சு கூட விட்டதாகத் தெரியவில்லை!

இன்றைக்கு மக்களின் வாழ்க்கையை மிகப் பெரிய அளவில் பாதித்துக் கொண்டிருக்கும் காவிரிப் பிரச்னை, விலைவாசி உயர்வு போன்றவை குறித்து ஒரு வார்த்தை கூட பேசப்பட




வில்லை! ஒரு நல்ல வாய்ப்பை த.மா.கா. தவற விட்டு விட்டது.

மத்தியில் ஜனதா தளத்துடனும் மாநிலத்தில் தி.மு.க.வுடனும் கூட்டு வைத்திருப்பதால் எழும் வினோத சிக்கல் காரணமாக த.மா.கா. தலைவர்கள் பல விஷயங்கள் குறித்து வாய் திறக்க முடியாமல் மௌனமாய் இருந்திருக்கக்கூடும்.

ஆனால் அவ்வாறு அவர்கள் இருப்பதால் மக்கள் நிச்சயமாக ஏமாற்றமடைவார்கள். காவிரி விஷயத்தில், கர்நாடக அரசு, தமிழகத்தின் ஆயக்கட்டு உரிமைகளை மதிக்க வேண்டும் எனக் கோரும் ஒரு தீர்மானத்தையாவது மாநாட்டில் நிறைவேற்றியிருக்கலாம். அது கர்நாடக அரசுக்கு, தமிழ் மக்களின் ஒட்டுமொத்தமான வற்புறுத்தலாகவும் எச்சரிக்கையாகவும் அமைந்திருக்கும்.

விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்த மத்திய அரசு உடனடியாகச் செயல்பட வேண்டும் என்றொரு தீர்மானம் கொண்டு வந்திருக்கலாம். அதற்குரிய வழிகளை, வல்லுனர்களைக் கொண்டு இனங்காட்டியிருக்கலாம்.

'நிதியமைச்சரே மேடையில் அமர்ந்துள்ளபோது, எவ்வாறு இப்படியொரு தீர்மானம் கொண்டு வருவதாம்...?' என்ற தயக்கம் த.மா.கா.வுக்கு இருப்பதும் இயல்புதான்.

ஆனால் அந்த நிதியமைச்சரும், வேறு த.மா.கா. அமைச்சர்களும் தேசிய அளவில் அறியப் பட்ட தலைவரான மூப்பனாரும் இருப்பதால்தான் மக்கள் இவ்வளவு தூரத்துக்கு த.மா.காவை ஆதரிக்கத் திரண்டார்கள்.

இதனை தமிழ் மாநில காங்கிரஸ் தலைவர்கள் புரிந்து கொள்வது மிகவும் அவசியம். அவ்வாறு புரிந்து கொள்வார்களேயானால், சட்டமன்றத்தில் ஆக்கபூர்வமான எதிர்க்கட்சியாகச் செயல்படலாம்; அடுத்த மாநாடு நடத்தப்படும்போது தமிழகத்தையே நிமிர்ந்து உட்காரச் செய்யலாம்.

## தமிழ் மாநில காங்கிரஸின் முதல் மாநில மாநாடு உற்சாகத்தோடு நடந்து முடிந்த நிலையில், இ.காங்கிரஸின் தமிழக தலைவர் குமரி அனந்தன் என்ன கூறுகிறார்? அவரைச் சந்தித்தபோது மனம் விட்டுப் பேசினார். தி.மு.க. ஆட்சிக்கும் எச்சரிக்கை செய்தார்...

**“பெட்ரோலியப் பொருள்களின் விலையேற்றத்துக்காக நீங்கள் அண்மையில் மதுரையில் தர்ணா செய்தீர்கள். அது பற்றி வேறு கட்சிக்காரர்கள் அல்ல; உங்களுடைய கட்சிக்காரர்களே விமர்சனம் செய்திருக்கிறார்களே, அதற்கு என்ன காரணம்?”**

“நான் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவரானவுடனேயே கட்சியை வலுப்படுத்தும் முயற்சிகளில் ஈடுபட்டேன். அதற்கு கட்சி அமைப்புகள் வேண்டும். பொதுச் செயலாளர், இணைச் செயலாளர், துணைச் செயலாளர்கள் என்று பலரும் வேண்டும். இவர்களில் யாரும் எனக்கு நியமித்துத் தரப்படவில்லை. அதோடு கட்சியிலுள்ள 28 மாவட்டக் கமிட்டிகளில் 18 கமிட்டிகளுக்குத்தான் பொறுப்பாளர்களை நியமித்துக் கொடுத்தார்களே தவிர, பத்து கமிட்டிகள் அப்படியேதான் விடப்பட்டிருந்தன. அதனால் நான் நினைத்த வேகத்தில் கட்சியை வளர்க்கும் பணியைச் செய்ய முடியவில்லை. சம்பந்தப்பட்ட பொறுப்பாளர்களை நியமிக்காததற்குக் காரணம், கட்சியி லுள்ள கோஷ்டி அரசியல். இவரைப் போட்டால் அவருக்குப் பிடிக்காது; அவரைப் போட்டால் இவருக்குப் பிடிக்காது என்கிற சூழ்நிலையால் கட்சியின் மத்திய அமைப்பு யாரையும் நியமிக்காமல் தள்ளிப் போட்டுக் கொண்டே இருந்தது.

“இந்தச் சூழ்நிலையில் நான் கட்சியை வளர்க்க - பலப்படுத்த என்ன செய்ய முடியும் என்று யோசித்ததன் விளைவு தான் சிறுசிறு கட்சிகளாக இருக்கிற அம்பேத்கர் மக்கள் இயக்கம், குடியரசுக் கட்சி, தமிழ்நாடு முஸ்லிம் லீக், ஜனநாயக கிறிஸ்துவ முன்னேற்ற சங்கம், ஐக்கிய கம்யூனிஸ்ட் கட்சி, எம்.ஜி.ஆர். அ.தி.மு.க., ஆகியவற்றோடு பண்ருட்டி ராமச்சந்திரன், பெரியவர் ராஜாராம்



ஆகியோரிடமும் தொடர்பு கொண்டு பேசி, உள்ளாட்சித் தேர்தலில் (அ.தி.மு.க. ஆட்சியில்) இவர்களோடு கூட்டு வைத்துக் கொள்ள எண்ணினேன். இது பற்றி நரசிம்மராவிடம் பேசியபோது அவரும் அதற்கு ஒப்புதல் அளித்தார். ஆனால் அவர் வெளிநாட்டுக்குப் புறப்பட்டுச் சென்றவுடனேயே, ‘இந்தக் கட்சிகளோடெல்லாம் உள்ளாட்சித் தேர்தலில் உறவு வைத்துக் கொள்வதற்கான உரிமை குமரி அனந்தனுக்குக் கொடுக்கப்படவில்லை’ என்று ஒரு செய்தி வருகிறது. இத்தனைக்கும் அந்தக் கட்சிகளோடு உறவு வைத்துக் கொள்வது பற்றி இங்கிருந்த மூப்பனார் போன்றவர்களிடம்

கலந்து பேசி விட்டுத்தான் நரசிம்மராவிடமும் ஒப்புதல் பெற்றிருந்தேன். அப்படியிருந்தும் மூப்பனார் போன்றவர்கள், எனக்கு உரிமை கொடுக்கப் படவில்லை என்று வந்த செய்தி பற்றி ஒரு வார்த்தையும் பேசவில்லை. அது என் மன துக்கு நெருடலாக இருந்த போதிலும் நான் மௌனமே காத்தேன். கட்சியை வளர்க்க வேண்டும் என்கிற ஒரே எண்ணத்திலேயே செயல்பட்டேன்.

"மக்களிடம் கட்சியை எப்படிக் கொண்டு போவது என்று யோசித்தபோது, கீரை, பப்பாளி போன்ற வீடுகளில் பயிரிடும் விதைகளைச் சிறுசிறு பைகளில் போட்டு, அதற்குள் ராஜீவ், நரசிம்மராவ் படங்களை வைத்து, கூடவே ராட்டை மற்றும் கை சின்னங்களையும் வைத்துக் கட்சித் தொண்டர்களின் மூலம் மக்களிடம் கொடுக்க ஏற்பாடு செய்தேன். அந்த விதைகள் வீட்டுத் தோட்டங்களில் முளைத்துச் செழித்து வளர்கிற போது, அங்கே வளர்வது அந்தப் பயிர்கள் மட்டுமல்ல; காங்கிரஸும்தான் என்கிற எண்ணத்தில் செய்தேன்.

"இவை மாத்திரம் போதுமா என்று யோசிக்கிறபோதுதான் பாட்ஷா படவிழாவில் ரஜினி



**...நான் ரஜினியைச் சந்தித்து எங்களது ஆதரவைத் தெரிவித்தேன். அப்போது தலைவர் மூப்பனார் என்ன சொன்னார் தெரியுமா? 'நீங்கள் யாரைக் கேட்டு ரஜினியைப் போய்ப் பார்த்தீர்கள்?' என்று கண்டிக்கிற அளவுக்குப் பேசினார்.**



# "கோஷ்டி அரசியலால் நான் நினைத்த வேகத்தில் செயல்பட முடியவில்லை!"

வன்முறையை எதிர்த்துப் பேசினார். அவரது பேச்சை அ.தி.மு.க.விலுள்ள சிலர் விமர்சனம் செய்தபோது, நான் சென்று ரஜினியைச் சந்தித்து எங்களது ஆதரவைத் தெரிவித்தேன். அப்போது தலைவர் மூப்பனார் என்ன சொன்னார் தெரியுமா? 'நீங்கள் யாரைக் கேட்டு ரஜினியைப் போய்ப் பார்த்தீர்கள்?' என்று கண்டிக்கிற அளவுக்குப் பேசினார். அதே போல் எம்.ஜி.ஆர். விசுவாசிகளின் ஆதரவும் காங்கிரஸுக்குத் தேவை என்று நான் ஆர்.எம்.வீ.யைச் சந்தித்தபோதும் மூப்பனார் போன்ற தலைவர்கள் அதை விரும்பவில்லை!

"ஆயினும் நான் இதையெல்லாம் மனத்தில் வைத்துக் கொள்ளாமல், கட்சியின் வளர்ச்சிக்காகவே பாடுபட்டேன். தனித்து நின்றால் கூட வெற்றிபெற முடியும் என்கிற சூழ்நிலையில் தான் – யானை ஏற்றம், குதிரை ஏற்றம், போர்ப் பயிற்சிகளெல்லாம் பெற்று முடிசூட்டிக் கொள்ளத் தயாரான நிலையில் இருந்த ராமனைத் திடீரென்று தசரதன் காட்டுக்குப் போகச் சொன்னதுபோல் அது நடந்தது.... தந்தை போல் இருக்கும் நரசிம்மராவ் அ.இ.அ.தி.மு.க.வுடன் கூட்டு வைத்துக் கொள்ள முடிவு செய்தார்! நானும் ராமனின் நிலையிலிருந்து தந்தை சொல்மிக்க மந்திரமில்லை என்று அவர் முடிவைக் கடைப்பிடிக்க வேண்டியதாயிற்று!"

**"நீங்கள் ராமன் நிலையிலும் நரசிம்மராவ் தசரதன் நிலையிலும் இருந்ததாகச் சொன்னால் கைகேயி, கூனி எல்லாம் யார்?"**

"உதாரணத்தை ஓரளவுக்கு மேல் விளக்க முடியாது...! நான் பண்பாட்டைக் கடைப்




●● சமீபத்தில் காரைக்குடிக்கு அருகிலுள்ள 'பிள்ளையார் பட்டி'க்கு சென்றிருந்தேன். கட்டணம் இல்லாத சுத்தமான நவீன கழிப்பறை. குளியலறை வசதி. காலணிகளைப் பாதுகாக்க கட்டணம் எதுவும் இல்லை. அர்ச்சனைக்கு டிக்கெட், பிக்கல், பிடுங்கல் என்று எதுவும் இல்லை. தினசரி ஆயிரக்கணக்கில் பக்தர்கள் வருகை தரும் இங்கே இப்படியா? இன்னமும் ஆச்சர்யம் அடங்கவில்லை எனக்கு!

– பி.ஜி.பி. இசக்கி



●● ஆடியோ மியூஸிக் காஸெட்டை ரூ. 15க்கு கொண்டு வந்து சாதாரண ஏழை எளிய மக்களும் சங்கீதத்தை கேட்டு மகிழும்படி செய்த பெருமை சூப்பர் காஸெட் கம்பெனி அதிபர் குல்ஷன் குமாரையே சேரும். இப்பொழுது அதே புரட்சியை 'காம்பாக்ட் டிஸ்க்' விஷயத்திலும் செய்துள்ளார். ரூ. 400 அளவுக்கு விலையுள்ள காம்பாக்ட் மியூஸிக் டிஸ்க்குகளை ரூ. 60க்கு உற்பத்தி செய்து விற்க முடியும் என சவால் விட்டு நடத்தியும் காட்டியுள்ளார்.

– எஸ். ஆலன்
ஆதாரம் : ஸ்கிரீன்

பிடிப்பவன். கட்சி தோல்வியடைந்தபோது, 'அ.இ.அ.தி.மு.க.வுடன் கூட்டு வைத்துக் கொள்ள வேண்டும் என்று நரசிம்மராவிடம் வற்புறுத்தியவர்கள்தான் தோல்விக்குக் காரணம். எனவே, அவர்களுடைய பெயர்களையே போட்டு தோல்விக்குக் காரணமானவர்களே கட்சியை விட்டு வெளியேறுங்கள்' என்று போஸ்டர் அடித்து ஒட்டலாமா எனத் தொண்டர்கள் என்னிடம் கேட்டபோது நான் மறுத்து விட்டேன்."

**"நீங்கள் உங்களின் பழைய கட்சியான கா.கா.தே.கா. ஆட்களுக்குத்தான் கட்சியில் முக்கியத்துவம் கொடுத்திருக்கிறீர்கள் என்று ஈ.வெ.கி. இளங்கோவன் நேரடியாகவே குற்றம்சாட்டியிருக்கிறாரே?"**

"அவர் பெரியாரின் பேரன் – சம்பத்தின் மகன் என்பதாலேயே ஈரோட்டில் வசிப்பவராக இருந்தாலும் அவருக்கு கிருஷ்ணகிரி தொகுதியில் போட்டியிட சீட் வாங்கிக் கொடுத்தேன். அவர் என்ன கா.கா.தே.காவிலா இருந்தார்? மூப்பனார் பிரிந்து விட்ட சூழ்நிலையில் – இன்னும் இரண்டே நாட்களில் வேட்பாளர்களை அறிவிக்க வேண்டும் என்ற சூழ்நிலையில் – நான் ஆட்களைத் தேர்வு செய்ய வேண்டிய கட்டாயம். யாரெல்லாம் நம்மோடு இருக்கிறார்கள், யாரெல்லாம் மூப்பனாரோடு இருக்கிறார்கள் என்று தெரியாத சூழ்நிலையில் நான் என்ன செய்ய முடியும்? யாரெல்லாம் நம்மோடுதான் இருக்கிறார்கள் – இருப்பார்கள் என்று உறுதியாக நம்பினேனோ அவர்களுக்குத் தர வேண்டியதாயிற்று. அவர்களில் சிலர் கா.கா.தே.காவில் இருந்தவர்கள் என்பது என்ன அவ்வளவு பெரிய குற்றமா? பிரணாப் முகர்ஜி, சரத்பவார், ஏ.கே. அந்தோணி, பங்காரப்பா போன்றவர்களெல்லாம் தனிக் கட்சி கண்டு, பிறகு காங்கிரஸில் வந்து இணைந்தவர்கள்தானே! அவர்களைப் பிரித்துப் பார்க்க முடியுமா? அப்படிப் பார்ப்பதுதான் சரியாகுமா?"

**"காமராஜ் ஆட்சியைக் கொண்டு வருவோம்' என்று சொன்ன மூப்பனாரை, அவர் காங்கிரஸ் தலைவராக இருந்தபோது கொண்டு வந்திருக்கலாமே' என்று நீங்கள் விமர்சனம் செய்திருக்கிறீர்கள். இப்போது உங்களுக்கிருக்கும் கோஷ்டி அரசியலின் இடைஞ்சல்கள் அவருக்கும் இருந்திருக்கலாமே?"**

"அப்படியில்லை. பெருந்தலைவர் காமராஜருக்குப் பிறகு டெல்லியில் மிகவும் செல்வாக்குப் பெற்ற தலைவராக இருந்தவர் மூப்பனார்தான். அந்த வகையில் அவர் செய்திருக்கலாமே என்பதுதான் எனது கேள்வி."

**"அ.தி.மு.க.வுடன் கூட்டு கூடாது என்கிற விஷயத்தில் நீங்களும் மூப்பனாருடன் ஒத்த கருத்துடையவராகத்தான் இருந்தீர்கள். இருப்பினும் கூட்டு உறுதியாகிவிட்ட சூழ்நிலையில் மூப்பனாரும் மற்றவர்களும் பிரிந்து வர நேரிட்டது. அதே கருத்துடைய நீங்கள் மட்டும் வராததற்கு என்ன காரணம்?"**

"மூப்பனார் எப்படிப்பட்ட பொறுப்புகளை வகித்தவர்? அகில இந்தியக் காங்கிரஸில் எந்தெந்த மாநிலங்களிலெல்லாம் கட்சியில் விரிசல் ஏற்படுகிறதோ, அங்கெல்லாம் சென்று கட்சியை ஒட்ட வைத்தவர். அப்படிப்பட்டவர் வெட்டிக் கொண்டு வருவாரென்று நான் ஒருபோதும் நினைக்கவில்லை...."

**"ஒட்டவைத்த பணியில் இருந்த ஒருவரே வெட்டிக் கொண்டு வருகிற சூழ்நிலை ஏற்பட்டதே என்கிற கோணத்தில் பார்க்கலாமே!"**

"நானும் அங்குதான் வருகிறேன். அ.தி.மு.க. கூட்டை ஒப்புக் கொள்ள முடியாது. அதனால் தொண்டர்களிடம் ஏற்படும் கொந்தளிப்

யையும் சரிசெய்ய முடியாது என்கிற நிலையில் அவர் என்ன செய்திருக்க வேண்டும்? என்னையும் அழைத்து, 'அனந்தன் இனி நமக்கு வேறு வழியில்லை. வா, நரசிம்மராவிடம் மீண்டும் போகலாம். கூட்டு உறுதிதான் என்றால் நாங்கள் பிரிவதைத் தவிர வேறு வழியில்லை என்று சொல்லி விடலாம்' என்று டெல்லிக்குக் கூட்டிச் சென்றிருக்கலாம். நானும் சென்றிருப்பேன். அப்படி நாங்கள் நரசிம்மராவிடம் சொல்லியிருந்தால் நிச்சயமாக நரசிம்மராவ் அ.தி.மு.க. கூட்டணிக்குச் சம்மதித்திருக்க மாட்டார். நிச்சயம் தனித்துப் போட்டியிடவே சொல்லியிருப்பார். ரஜினியின் ஆதரவு, மற்றும் சிறு சிறு கட்சிகளின் ஆதரவுடன் இன்றைய வெற்றியை நாங்களே பெற்றிருந்திருக்கக்கூடும். ஆக, என்னுடைய வருத்தமெல்லாம் நரசிம்மராவிடம் ஒன்றுமே சொல்லாமல் இருந்து விட்டு, இங்கே வந்து திடீரென்று தனிக்கட்சி ஆரம்பித்து விட்டாரே என்பதுதான். அது நேர்மையாகுமா? அப்படியொரு நேர்மையற்ற செயலுக்கு நான் எப்படி உடன்பட முடியும்?"

**"சத்தியமூர்த்தி பவன் பற்றிச் சில நாட்களுக்கு முன்பு மூப்பனாரிடம் கேட்ட போது, அனந்தன்தானே விட்டு விட்டுச் சென்றார் என்று கூறினார்! நீங்கள் ஏன் விட்டு விட்டு வந்தீர்கள்?"**

"ஒரு வேலையாக வீட்டிலிருந்து வெளியே போனோம் என்பதாலேயே நாங்கள் வீட்டைக் காலிசெய்து விட்டதாக அர்த்தமாகி விடாது. அறங்காவலர்கள் மூப்பனார் கட்சியிலிருப்பதாலும் அது அவர்களுக்குச் சொந்தமாகி விட முடியாது. பெருமாள் கோயில் அறங்காவலர்கள், தங்கள் கருத்துக்களை மாற்றிக் கொண்டு விட்டார்கள் என்பதாலேயே பெருமாள் கோயில், சிவன் கோயில் ஆகிவிட முடியாது."

**"சரி, எப்படியோ இன்று நிலைமைகள் மாறி விட்டன. த.மா.காவும் தனது முதல் மாநில மாநாட்டை மிகவும் உற்சாகத்தோடு நடத்தியிருக்கிறது. இந்தச் சூழ்நிலையில், தமிழ கத்தில் காங்கிரஸ் கட்சியைப் பலப்படுத்த முடியும் என்று நம்புகிறீர்களா?"**

"அவர்கள் வெற்றி பெற்றது உண்மைதான். ஆயினும் அது மக்கள் பாத்திரமறிந்து போட்ட வோட்டால் பெற்ற வெற்றி அல்ல. ஆத்திரத்தில் போட்ட வோட்டால் கிடைத்த வெற்றி. இனி மக்களின் மனநிலை மாத்திரமல்ல; தொண்டர்களின் மனநிலையும் மாறலாம். அதனால், த.மா.கா. மாநாட்டில் பெரியவர் சி.எஸ். பேசிய மாதிரி, மூன்று கட்சிகள்தான் இருக்க முடியும். ஒன்று காந்தியும் நேருவும் வளர்த்த காங்கிரஸ். இரண்டாவது பெரியார் வழி வந்த கட்சி. மூன்றாவதாக மார்க்சிய வழிகளைக் கொண்ட கம்யூனிஸ்ட் கட்சி. இப்படி அனைவரும் மூன்று கட்சிகளாக ஒன்றுபட வேண்டும் என்பதையே மறைமுகமாக சி.எஸ். பேசியிருக்கிறார். அந்த வகையில், பிரிந்து சென்ற அனைவரும் தாய்க்கட்சிக்கே வந்து சேரவேண்டும் என்பதே எனது ஆசை."

**"தி.மு.க. ஆட்சி பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"**

"விருதுநகரில் தினசரி 64 லாரிகளில் குடிநீர் சப்ளை செய்து கொண்டிருக்கிறார்கள். ஒரு லாரிக்கு தினசரி வாடகையாக ஐந்நூறு ரூபாய்க்குச் சப்ளை செய்ய ஒப்புக் கொண்ட ஒப்பந்தக்காரருக்கு அனுமதி மறுக்கப்பட்டு, எழுநூறு ரூபாய் வாடகையில் சப்ளை செய்யப்படுகிறது. ஏழைகளுக்கு 240 தொகுப்பு வீடுகள் கட்டப்பட்டு வழங்கப்பட இருக்கிறது. அதில் வீடு கிடைக்க வேண்டுமானால் 1300 ரூபாய் கேட்கிறார்கள். அப்புறம் நான் நாகர்கோயில் சென்றிருந்தபோது, அங்குள்ள கோட்டாறு காவல் நிலையத்தில் பிடித்து வைக்கப்பட்டிருந்த சிலரை, தி.மு.க. நகர கமிட்டிச் செயலாளர் கலபமாக வெளியே கொண்டு போயிருக்கிறார். இதனாலெல்லாம் இந்த ஆட்சியே கெட்டுப்போய்விட்டது என்று நான் சொல்ல வரவில்லை. இந்த ஆட்சியின் தலைமை மிகுந்த எச்சரிக்கையோடு செயல்பட வேண்டும் என்பதற்காகவே சொல்கிறேன்."

பேட்டி : **இளங்கோவன்**
படம் : **யோகா**

---



"கரண்ட் இல்லாத சமயத்தில் காத்துக்கு என்ன செய்வீங்க? ரெண்டு பனை ஓலை விசிறி வாங்கிக்கங்க..."

"கார்ப்பரேஷன் குழாய் இருக்கும் போது எதுக்கு 'விசிறியும்' 'ஃபேனும்'? பேசாம வா...!"

– ஜூனியர் தேஜ்

# கயிற்றின் மேல் நடக்கும் கருணாநிதி!

கயிற்றின் மேல் நடக்கும் வித்தையை அனாயாசமாகச் செய்து காட்டியிருக்கிறார் கருணாநிதி! தமிழக பட்ஜெட்டில் 306 கோடி மதிப்புக்கு வரிச் சுமையிலிருந்து விடுதலை தருவதென்றால் சும்மாவா...! நெஞ்சுரமும் நம்பிக்கையும் இருந்தாலொழிய இப்படி அரசுக்கு வருவாயைக் குறைக்கும் காரியத்தைச் செய்ய முடியாது. அதுவும் பட்ஜெட்டில் பற்றாக்குறை ரூபாய் 851 கோடியில் வந்து நிற்கும் போது.

அடுத்தடுத்து வரும் அரசாங்கங்கள் வரி விதிப்பை அதிகரிப்பதன் மூலமே அரசுக்கு வருவாயை அதிகரிக்க முடியும் என்ற நோக்கில் செயல்பட்டு வந்திருக்கின்றன.



வரி விதிப்பு அனுமதிக்கும் ஊழலும் நிச்சயமாகக் குறையும்.

இந்தக் காரணங்களுக்காக தமிழக முதல்வரின் பட்ஜெட்டை வாழ்த்தி வரவேற்போம்.

அதே சமயத்தில், பற்றாக் குறையைச் சமாளிக்க மத்திய அரசிடம் அவர் நிறைய எதிர்பார்ப்பது சரியல்ல என்பதையும் சுட்டிக்காட்ட வேண்டியுள்ளது. மாநில அரசு மூலம் கணிசமாக வருவாய் பெறும் மத்திய அரசு, மாநிலங்களுக்கு நிறைய நிதியளிக்க வேண்டும் என்பதை யாரும் மறுப்பதற்றில்லை.

ஆனால், மத்திய அரசுக்குக் கிடைக்கும் வருவாயில் சுமார் 62 சதவிகிதம்,

கலைஞர் இந்த பட்ஜெட்டில் வரிகளை நேரடியாகக் குறைக்காவிட்டாலும் விற்பனை வரி வசூலில் பல சீர்திருத்தங்களைக் கொண்டு வந்து, வரிச் சுமையைக் குறைத்து, கூடுதலான வரி வசூலுக்கு வழிவகுத்திருக்கிறார். வரி விதிப்பு எளிமைப்படுத்தப்பட்டிருப்பதால் பெரும்பாலானோர் சுணங்காமல் வரி செலுத்துவார்கள்; அதனால் வருவாய் பெருகும் என்பது எதிர்பார்ப்பு.

பல பொருள்களுக்கு பல்முனை விற்பனை வரி விதிக்கப்பட்டு வந்தது. அதாவது தயாரிப்பாளரிடமிருந்து மொத்த வியாபாரிக்கும், பின்னர் சில்லறை வியாபாரிக்கும் ஒரு பொருள் கைமாறும் போது, ஒவ்வொரு கட்டத்திலும் விற்பனை வரி விதிக்கப்பட்டு நுகர்வோர் தலையில் அதன் சுமை விடிந்தது. இப்போது அந்த முறை கைவிடப்பட்டு ஒருமுனை வரியாக மாற்றப்பட்டிருக்கிறது. மஹாராஷ்டிர மாநிலத்தைப் பின்பற்றி, Value Added Tax என்ற வரி விதிக்கப்படவுள்ளது. இதன் மூலம் உற்பத்திப் பொருள்களின் மீது, அதன் உற்பத்தி முறையைப் பொறுத்து உரிய விகிதத்தில் ஒரே வரியாக அறிமுகப்படுத்தப்படும். காலப்போக்கில் விற்பனை வரியென்பதே இல்லாமல் போய், Value Added Tax என்ற ஒருமுனை உற்பத்தி வரி மட்டுமே விதிக்கப்படும்.

இதனால் நுகர்வோரின் சுமை குறைவதுடன், பல்முனை விற்பனை வரி வசூலுக்காகச் செய்யப்படும் ஏராளமான தண்டச் செலவும், அத்தகைய

வாங்கிய கடன்களுக்கு வட்டி செலுத்தவே சரியாய்ப் போய்விடுகிறது. (நாட்டின் இப்போதைய கடன் சுமை நான்கு லட்சம் கோடி ரூபாய்...! என்ன தலைசுற்றுகிறதா!)

இந்த நிலைமையில், கலைஞர் கேட்பது போல், மாநிலங்களிலிருந்து மத்திய அரசு பெறுகிற வருவாயில் 1/3 பகுதியை மீண்டும் மாநிலங்களுக்கே தந்துவிட்டால், அரசு இயந்திரம் இயங்கக் கூடப் பணம் இருக்காது.

சரி, மாநில அரசுகள் வருவாயை அதிகரித்துக் கொள்ள என்னதான் வழி...?

மாநிலங்களின் வருவாய் முக்கியமாக விற்பனை வரி, மோட்டார் வாகன வரி, பதிவுக் கட்டணங்கள் மூலமே கிடைக்கிறது. இந்த வரிகளை அதிகரிக்க வாய்ப்பு இல்லாத நிலையில் புதிதாக சர்வீஸ் டாக்ஸ் என்றொரு வரி விதிக்க மாநிலங்களுக்கு அதிகாரம் வேண்டும் என்று கோரியிருக்கிறார் கலைஞர்.

எவ்வளவுதான் வரிகள் விதித்தாலும் உற்பத்திப் பெருக்கம் கணிசமாக இல்லாவிட்டால், அரசுக்கு வருவாய் போதுமான அளவு பெருகாது. இந்த பட்ஜெட்டில் சிறந்த வரிச் சீர்திருத்தங்களைப் புகுத்தியதன் மூலமும் தொழில் முயற்சிகளுக்கு வரவேற்பும் ஆதரவும் காட்டி வருவதன் மூலமும் வருவாய் பெருக்கத்திற்கு ஓர் ஆரம்பம் ஏற்படுத்தியிருக்கிறார் முதல்வர்.

**- வி. கோபாலன்**

செல்லப்பாவுக்கு அந்தப் பெட்டியைத் திறந்து காட்டியதும் வெலவெலத்துப் போய்விட்டது. விழி பிதுங்கிவிட்டது என்பதுதான் உண்மை.

"ஓங்களுக்கு இல்லே இது. இதக் கொண்டு போய் நீங்க மிஸ்ராட்டக் குடுத்துட்டாப் போதும். குடுத்துட்டு திரும்பிப் பாக்காம வந்துடுங்கோ!" என்றார் பட்டுசாமி.

மைத்துனன் கிருபாசங்கர் மீதுதான் செல்லப்பாவுக்குக் கோபமும் ஆத்திரமும் பொத்துக் கொண்டு வந்தன. தில்லிக்கு வந்து சேர்ந்து, இந்த இருபத்து நாலு வருடங்களாக அவன் போடுகிற சாப்பாட்டுக்கும் செலவுக்கு என்று தருகிற ஐந்நூறு ரூபாய்க்கும் கட்டுப்பட்டுத்தான் இந்த மாதிரி துஷ்கிருத்யங்களில் இறங்க வேண்டியிருக்கிறது.

"உம்மோட கதர் ஷர்ட்டும் கதர் வேஷ்டியும் உம்மை ஒரு பார்ட்டி ஆளாகத்தான் காண்பிக்கிறது. யாரும் சந்தேகப் பட மாட்டா!" என்றான் கிருபா.

"அதுனால தைரியமா எடுத்துண்டு போய் மிஸ்ராட்ட குடுத்துடும். மீதி எது ஒண்ணைப் பத்தியும் நீர் கவலையேபட வேணாம்!"

'கதர் டிரஸ் ஒண்ணுதான் கட்சிக்காரன் வேஷம். கலைந்து போன பரட்டைத்தலை. ஒடுங்கிய கன்னம், ஃபிடில் குச்சி போல உடம்பு எல்லாம் நிச்சயமா கட்சிக்காரனோட சேர்த்தி இல்லே' என்று நினைத்துக் கொண்டான் செல்லப்பா.



பெட்டியை மனசில்லா மனசோடுதான் பட்டுசாமியிடமிருந்து வாங்கிக் கொண்டான். பெட்டி கனமாய் இருந்தது. இருக்காதா பின்னே? அத்தனையும் கரன்சி. கத்தை கத்தையாய் கரன்சி. முன்னாலேயே இன்னார் கம்பெனியிலிருந்து சூட்கேஸ் கொண்டு வந்து தருவார்கள் என்று எல்லாம் பேசி முடிவாகிவிட்ட சமாசாரம்தான். கம்பெனி ஆள் யாராலும் கொண்டு போய்க் கொடுத்து வெளியே விவகாரம், விகாரம் ஆகிவிடாமல் இருக்கத்தான் இந்த ஏற்பாடு. செல்லப்பா அப்பாவி. செய்யச் சொன்ன வேலையை, சொன்ன மாதிரி செய்து விட்டு வந்து விடுவான் என்று அவர்களுக்கு நம்பிக்கை இருந்தது.

"இது ஒரு பெரிய பிராஜக்ட். நானூறு கோடி ரூபாய் பிராஜக்ட். கெடைச்சா கோடிக் கணக்குல லாபம் வரும். ஹோகூர்லதான் கேட்டுருக்கோம். உங்க தூரத்து ஒறவுல யாருக்கோ வேலை வேணும்னு கேட்டுண்டு இருந்தேனே, வரட்டும். முதல் அப்பாயின்ட்மென்ட் அவருக்குத்தான்!'' என்றான் கிருபா. இதெல்லாம் வெளிப் பேச்சு. ஃபாக்டரி வந்ததும், 'எம்.பி.ஏ.க்காரன், லேவியர் இன்ஸ்ட்டிட் யூட்காரனுக்கு எல்லாம்தான் முதல்ல உத்தியோகம் போட்டுக் குடுப்பான்' என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்டான்.

**க**ட்சி அலுவலகத்தில் வெளியே பாதுகாப்புக்கு, துப்பாக்கி தாங்கிய முரட்டு போலீஸ் இருந்தது. மெட்டல் டிடெக்டர் கருவியோடு யாரும் இல்லை என்றாலும், கடந்து போகக் கட்டாயமாக வாசக்கால் மாதிரி மரச் சட்டம் வழியே நுழைந்துதான் போக வேண்டியிருந்தது.

ஒரு ஜீப் வந்து, யாரோ அவசர அவசரமாய் இறங்கி உள்ளே போனார்கள். 'இவன்தான் மிஸ்ராவோ? யாரு கண்டா?'

மெல்ல மெல்ல பார்ட்டி ஆபீசில் கூட்டம் அதிகரித்தது. அறைகளின் சாத்திய கதவுகளுக்கு வெளியே ஒவ்வொருவித முகத்துடன், ஒவ்வொரு விதக் கவலையுடன் ஆட்கள் காத்து நிற்கத் தொடங்கினார்கள். சிலர் விஸிட்டிங் கார்டு கொடுத்தார்கள். சிலர் கதவு திறந்ததும் எட்டிப் பார்த்து, ஒரு சிரிப்புச் சிரித்தே உள்ளே போனார்கள்....

"மிஸ்ரா சாப் ஆகயா க்யா?" என்று கேட்டான் செல்லப்பா.

எடுபிடிக்கு இவனிடம் பதில் சொல்லவே வெறுப்பு போல. ஒரு அசிரத்தையான பார்வையை அவன் மீது உதிர்த்துவிட்டு நகர்ந்து விட்டான்.

பெட்டி கனத்தது. இந்தக் கடன்கார மிஸ்ராவிடம் இதைக் கொடுத்துத் தொலைத்து விட்டால் இங்கிருந்து போய்விடலாம். கொடுத்தாச்சு என்று கிருபா சங்கரிடம் சொல்லி விடலாம்....

**இ**தற்குள் ஒரே பரபரப்பு. கட்சித் தலைவர் வந்து விட்டார். ஆட்சித் தலைவரும் அவரே.

திடீரென்று எங்கிருந்துதான் அத்தனை கூட்டம் வந்ததோ தெரியவில்லை. கார்களும் ஆட்டோ



**சாருகேசி**

ரிக்ஷாக்களும் சர்சர்ரென்று வந்து நின்றன.

தலைவருடன் கூட வந்தவரைத்தான் மிஸ்ரா என்று அடையாளம் காட்டினார் ஒரு தொண்டர். செல்லப்பா உஷாரானான்.

கிருபாசங்கர், பட்டுசாமி இருவரும் வேலை பார்க்கும் நிறுவனத்தின் விசிட்டிங் கார்டை எடுத்து வைத்துக் கொண்டான். வியர்வை பட்டு, கொஞ்சம் நனைந்துதான் போயிருந்தது.

''மிஸ்ரா சாப்கோ மில்னா ஹை....'' என்றான் ஒரு கண்ணாடிக்காரரிடம்.

''சாப்தோ பிஸிஹை. கார்டு தியா ஆப்கோ?''

கொடுத்தான்.

அரை மணி ஆயிற்று. ஒரு மணி ஆயிற்று. 'மிஸ்ரா உள்ளே இருக்கானா? இல்லை ஜன்னல் வழியாக் குதிச்சு ஓடிப் போயிட்டானா? கர்மம், கர்மம்.'

கூட்டிக்குச் சம்பந்தமே இல்லாத மாதிரி ஒரு குடும்பம் வந்தது. கணவனும் மனைவியும் பஞ்சப் பரதேசிகளாகத் தெரிந்தார்கள். கூடவே




குஞ்சும் குளுவானுமாக மூன்று குழந்தைகள். பெரிதாக ஒரு பையன் மட்டும் அப்பனைத் தாங்கிக் கொண்டு.

தலைவரைப் பார்க்க வேண்டுமாம்.

"ஒரே ஒரு நிமிஷம்தான். என் கஷ்டத்தைச் சொல்லிவிட்டுப் போய்விடுகிறேன். அவர் ஏதாவது கொடுத்தால் வாங்கிக் கொண்டு போய்விடுகிறேன்'' என்றான் கணவன். 'சாப்பிட்டு எத்தனை நாள் ஆச்சோ, பாவம்!'

தலைவர் மாதிரி தெரிகிற அத்தனை பேரிடமும் அவர்கள் மன்றாடியது பரிதாபமாய் இருந்தது.

செல்லப்பா மெல்ல அங்கிருந்து நகர்ந்தான். அவர்களை அழைத்துக் கொண்டு பின்னால் இருந்த கேன்டீனுக்குப் போனான்.

உத்தரபிரதேசத்தில் இருக்கிற ஏதோ ஒரு கிராமத்திலிருந்து வருகிறார்களாம். கணவனுக்கு வைத்தியம் பார்த்ததில் நிலத்தை விற்றுக் கிடைத்த நாற்பதாயிரம் ரூபாயும் போய் விட்டது. மூளைக் காய்ச்சல் என்று சொன்னார்களாம். வேறு பெரிய ஆசுபத்திரியில் சிகிச்சை எடுத்துக் கொள்ளச் சொல்லி அனுப்பிவிட்டார்களாம்!

"அடப்பாவிகளா!" என்றான் செல்லப்பா, வாய்விட்டு.

அவர்கள் ரொட்டியையும் பாஜியையும், சேவ்டாலையும் பரபரத்துப் போய்ச் சாப்பிட்டதைக் கண்டு, உண்மையிலேயே பயங்கரப் பசி அவர்களுக்கு இருந்திருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டான்.

"இப்போது எதற்காக இங்கே வந்தீர்கள்? யார் உங்களை இங்கே வரச் சொன்னார்கள்?''

"நாங்களாகத்தான் வந்தோம். இவர்தானே நாட்டின் தலைவர்? ஏதாவது நல்லது பண்ண மாட்டாரா என்று வந்தோம்... நீங்க யாரு? தலைவரோட ஆபீசுல வேலை பார்க்கறீங்களா... உங்களுக்கு நல்ல மனசு!" என்றார்கள் கணவனும் மனைவியும்.

ஒரு குடிசை மட்டும்தான் இருக்கிறதாம். நிலம் போய்விட்டது. இனி பிழைப்புக்கு வழி? "இந்த மனிதரோட வாழ்வு எத்தனை நாள்?'' என்று கேட்டாள் அந்தப் பெண், கண்ணிலிருந்து கரகரவென்று நீர் சொரிந்தபடி.

சந்தடியே இல்லாத மரத்தடிக்கு அவர்களைக் கூட்டிக் கொண்டு போனான் செல்லப்பா.

''பை ஏதாவது கொண்டு வந்திருக்கீங்களா?'' என்று கேட்டான்.

சில அலுமினியப் பாத்திரங்கள் போட்ட ஒரு காலி சிமென்ட் பையைக் காண்பித்தாள் அந்தப் பெண்.

செல்லப்பா சூட்கேஸைப் பட்டென்று திறந்தான். உள்ளே நெருக்கி நெருக்கிப் பக்கவாட்டில் வைத்திருந்த நூறு ரூபாய்க் கட்டுக்களிலிருந்து ஒவ்வொன்றாக எடுத்து, ஐந்து கட்டுக்களைப் போட்டான்.

"வச்சுக்குங்க. ஊருக்குப் பத்திரமா பஸ் பிடிச்சு போய்டுங்க. பஸ் ஸ்டாண்டு தெரியுமா? ஐ.எஸ்.பி.டி. இருக்கே அதுதான். ஒரு ஆட்டோ பிடிச்சுப் போய்டுங்க!" என்றான்.

"இது தலைவர் கொடுத்ததுதானா?'' என்று கேட்டான் கணவன்காரன்.

"ஆமா. தலைவர் கொடுத்ததுதான்!" என்றான் செல்லப்பா அழுத்தமாக.

அவர்கள் நம்ப முடியாமல், அந்த அழுக்கு சிமென்ட் பையை மூடிப் புறப்பட்டபோது, செல்லப்பாவுக்கு மனசெல்லாம் பாரம் இறங்கி லேசாகிவிட்டிருந்தது.

"பாக்கி போகும் அந்தச் சனியன் மிஸ்ராவுக்கு!" என்று அவன் சொன்னது யாருக்கும் கேட்டிருக்காது.





# பசுமை விதைத்து,
# வளமை பெருக்கும் ஈஸ்வர்



ஈஸ்வர் குரோடெக் லிட்., மதுரைக்கு அருகில் மிகப் பெரிய பசுமையான சோலையை (சுமார் 5000 ஏக்கர் நிலப்பரப்பு) உருவாக்கி வரும் முன்னணி தொழில் நிறுவனம்.

இந்த சோலையில் உருவாகும் தேக்கு, காய்கறி மற்றும் பழத் தோட்டங்கள் பசுமை பெருக்கி வளமை பெருக்க வழி வகுப்பவை.

சிறந்த வேளாண் நிபுணர்கள் மற்றும் தொழில் நுட்ப வல்லுனர்கள் இந்த ஈஸ்வர் சோலையை மிகச் சிறந்த லாபத்திற்கு இயக்குவார்கள்.

மேலும், தரிசு நிலங்களை பொன் விளையும் பூமியாக்கும் டி-சல், உரங்கள், பூச்சி மருந்துகள் மற்றும் விதைகளை ஈஸ்வர் தயாரிக்கிறது.

**ஈஸ்வர்-இன் பொன் விளையும் திட்டங்கள்:**

| உங்கள் முதலீடு | நீங்கள் பெறுவது | 20 ஆண்டுகளில் மதிப்பு |
|---|---|---|
| ரூ. 25,000/- அல்லது ரூ. 250/- வீதம் 100 சுலப தவணைகள் | 10,000 ச. அடி நிலம் | ரூ. 10 லட்சம் |
| | 24 தேக்கு மரங்கள் | ரூ. 24 லட்சம் |
| | 2 ஒட்டு மா | ரூ. 50,000 |
| | 2 வீரிய தென்னை | |
| | காய்கறி தோட்டம் | ரூ. 50,000 |

**20 ஆண்டுகளில் ரூ. 35 லட்சம் மதிப்பு சொத்துக்கள்**

• 10,000 ச. அடி நிலம் உடன் உங்கள் பெயரில் பதிவு செய்யப்படுகிறது. • அற்புத தொழில்நுட்ப விற்தை • சிறந்த நீர்வளம், மண்வளம், பயிர் வளம் • சில ஆண்டுகளில் உங்கள் நிலம் மதுரை நகரின் மையமாகி விடும். • பண்ணை வீடுகளும் கட்டிக்கொள்ளலாம்.

**ரூ. 100/- வீதம் 15 மாதங்கள் செலுத்தி லட்சம் பெறும் திட்டங்களும் உள்ளன.**




287, West Masi Street, Madurai 625 001. Phone: 540305, 540843.
Fax : 0452-540305. Telex : 0445-478-AGRI-IN.





**பசுமை வளம் நிறைந்த இந்தியாவை உருவாக்குவோம்.**

எங்கள் கம்பெனி (ஈஸ்வர்), சென்னையை சார்ந்த ஈஸ்வரி குரூப் ஆப் கம்பெனிகளுக்கு எந்த விதத்திலும் தொடர்பு இல்லையென்று தெரிவித்துக்கொள்கிறோம்.

FIN-HANS R K SWAMY/BBDO 15493 A EGTL

11

# முக்கூர் லக்ஷ்மி நரசிம்மாச்சார்யார்

ஒருத்தர் கை நீட்டி யாசிக்கிறார். பத்து ரூபாய் கேட்கும் அவருக்கு மற்றொருத்தர் ஆயிரம் ரூபாய் கொடுக்கிறார். 'ஆஹா! என்ன உதார ஹ்ருதயம்'னு கொடுத்தவரை நாம் கொண்டாடுகிறோம்.

இதை பகவான் கீதையிலே அப்படியே மாத்திட்டார்! 'என்கிட்டே கையை நீட்டிக் கேட்கிறீங்களே...என்ன உதார ஹ்ருதயம் உங்களுக்கு...' என்று கேட்பவரைச் சிலாகிக்கிறார்!

அவனிடத்திலே சென்று, அவன்தான் சர்வம் என்று உணர்ந்து, அவனைப் பார்த்துக் கை நீட்டுகிறவர்களை உயர்த்திச் சொல்கிறான் பகவான். 'இவர்கள் கேட்காவிட்டால் நான் யாருக்குக் கொடுப்பேன்?' என்கிறான்! வேறொருவர் கை நீட்டினாலொழிய கொடுப்பவருக்குப் பெருமை உண்டோ! அப்படி கை நீட்டுகிறவர்களை உதாரா: என்று கொண்டாடுகிறான் பகவான். அவனையே பற்றுதல் என்கிற அறிவை நமக்குத் தருகிறான். அந்த அறிவை உண்டாக்கும் தன்மையுடையவன் யார் என்று கேட்டால்... விச்வ சப்தத்தினால் அறியப்படுகிறவன்; சர்வத்திலும் இருப்பவன்; நமக்குச் சுலபமாய்க் கிடைக்கக் கூடியவன்- பரமாத்மா.

'அவன் ரொம்பப் பெரியவன்; அவன் கிட்டவே போக முடியாதுன்னு சொல்லி விட்டால், இந்த உபதேசம் எதற்கு... உபந்யாஸம் எதற்கு... எல்லாத்தையும் நிறுத்துங்கோ!' என்றுதான் சொல்லத் தோன்றும்.

ஆனால், எவ்வளவுதான் உயர்ந்தவனானாலும் அவன் திருவடியை அணுகிவிட்டால் நம்மிடத்திலே அன்பு கொண்டு ஓடி வருகிறான்.

'அகலில் அகலும் அணுகில் அணுகும்' என்கிறார் நம்மாழ்வார்.

ஒரு கப்பல் நிறைய அரிசி மூட்டை அடுக்கியிருக்கு. அதைச் சாப்பிட வருகிறது ஒரு காகம். சாப்பிட்டுக் கொண்டேயிருக்கையில் கப்பல் புறப்பட்டு நடுக்கடலுக்குப் போய் விடுகிறது. அதை உணர்ந்த காகம் கரைக்குத் திரும்பி விடலாம் என்று எண்ணி கிழக்குத் திக்காகப் பறக்கிறது. நெடுந்தூரம் பறந்தும் கரை தென்படவில்லை. இனிமேல் பறக்க சக்தியில்லைன்னு கப்பலுக்கே திரும்பி விடுகிறது காகம். சற்றைக்கெல்லாம் திரும்பவும் பறக்கிறது- மேற்குத் திக்கு நோக்கி... மீண்டும் திரும்புகிறது. இப்படியே நாலா திக்கிலும் பறந்து ஓடி, சோர்ந்து கப்பலுக்கே திரும்பிடுறது!

நாம் அந்தக் காகம் மாதிரி. பரமாத்மா அந்த கப்பல் மாதிரி. 'நீ எங்கதான் போவே... எங்க போனாலும் இங்க தானே வரணும்...' என்று நாம் போவதைப் பார்த்துக் கொண்டு வாய் மூடி இருக்கிறான்!

ராமாயணத்திலே விபீஷண சரணாகதியை வர்ணிக்கும்போது, 'விபீஷணன் ராமனிருக்கும் இடம் சென்றான்' என்று






சொல்லப்படவில்லை. 'ராமனிருக்கும் இடம் வந்தான்' என்றுதான் சொல்லி இருக்கிறது!

இதற்கு என்ன அர்த்தம்...? வர வேண்டிய இடத்துக்கு அவன் வந்து சேர்ந்து விட்டான் என்று அர்த்தம்.

நாமும் அப்படித்தான் பகவானை விட்டுச் சென்றவர்களாக இருக்கிறோம். அவனிடத்தில் சேர வழி அனைத்தையும் அவனே தான் காட்டிக் கொடுக்கிறான்.

**வே**தத்திலே புருஷ சூக்தமும் புராணங்களிலே விஷ்ணு புராணமும் பாரதத்திலே பகவத் கீதையும் தர்ம சாஸ்திரங்களிலே மனு ஸ்ம்ருதியும் ரொம்ப உயர்ந்தவை என்று சொல்லப்படுகிறது.

அப்படிப்பட்ட புருஷ சூக்தத்திலே சொல்லப்படுபவன் தான் பரமாத்மா.

'புருஷ' என்கிற சப்தத்துக்கு நான்கு வித அர்த்தமிட்டார்கள்.

புரி சயனாது புருஷ: புரி என்றால் சரீரம். நம் சரீரத்திலே இருக்கிறான் பகவான். கீதையிலே பகவான் குந்தி புதல்வனிடம் சொல்கிறார்: 'இதம் சரீரம் கௌந்த்யோ (குந்தி புதல்வ) க்ஷேத்ரம்' சரீரமே க்ஷேத்ரம்!

ஆகையினாலே ரொம்ப ஜாக்கிரதையாக அதைக் காக்க வேண்டும்.

இந்த சரீரம் எப்படிப்பட்டது...? அதிகாலை நாலு மணிக்கு எழுந்திருக்கும் வழக்கத்தை உண்டு பண்ணி விட்டால், எந்த ஊருக்கு நாம் போனாலும் இது நாலு மணிக்கு எழுந்து உட்கார்ந்து கொள்ளும்! நாம் எப்படி வளைக்கிறோமோ அப்படியெல்லாம் வளைந்து கொடுக்கும் நம் சரீரம்!

அதற்காக அதை எப்பாடு வேணுமானாலும் படுத்துவதா...?

பகவான் வாழும்படியான இந்த சரீரத்தை அழித்துக் கொள்ள நமக்கு உரிமை இல்லை. ரொம்ப ஜாக்கிரதையாக இதை ரக்ஷிக்கணும். சரீரத்திலுள்ளே ஆத்மா இருக்கிறதாலே அதை போஷித்து ரக்ஷிக்க வேண்டியுள்ளது.

ஒரு நல்ல பட்டு வஸ்திரம். துவைத்து உலரப் போட்ட வஸ்திரம். முள் புதரில் பறந்து போய் விழுந்து



# சூழலின் சுழல்

ஜன்னலுக்கு வெளியே மழை...
உதட்டில் பட்டுத் தெறித்த
ஒரு துளி ஈரம்.

வலைக் கம்பியில் தொற்றிய
ஈர்ப்புள்ள நீர்வரிசை.

உடல்தோலைக் குறுகுறுத்த
பருவக் காற்றின் குளிர்வு.

மேகங்கள் மேற்கொண்ட
உயிர்ப்புள்ள தேடல்கள்.
வாடையின் அரவணைப்பில் பசும் மரங்கள்
சிலிர்க்கும் சித்திரங்கள்.

சூழலின் சுழலுக்குள்
மடிந்தமர்ந்த மனசு,

தூண்டிலிட்டது கவிதை எழுத.

- திருவாரூர் ஜெயகிருஷ்ணன்

விடுகிறது. ஏகப்பட்ட முட்கள் சிக்கிக் கொண்டு நிற்கின்றன. பிடித்து இழுத்தால் கிழிந்து விடும். முள்ளுக்கு நெருப்பு வைத்தால் மொத்தமும் போய் விடும்! அந்த நேரத்தில் என்ன வேண்டும் நமக்கு...? ரொம்பப் பொறுமை வேண்டும். பொறுமை இருந்தாலொழிய அந்தப் பட்டு வஸ்திரத்தை நாம் பெற முடியாது. நிதானமாக ஒவ்வொரு முள்ளிலிருந்தும் நீக்கி எடுக்க வேண்டும் அதை!

அந்த மாதிரி, இந்த ஆத்மா என்கிற பட்டு வஸ்திரம், சரீரமாகிற முள் புதரிலே அகப்பட்டுக் கொண்டிருக்கிறது. திமீர்னு அதை இழுத்துட முடியுமா...? ரொம்ப ஜாக்கிரதையாய், சாஸ்திரம் சொன்னபடி நின்று, சரீரத்திலிருந்து ஆத்மா பிரியும்படியான அந்த உத்தமமான நிலையை, சாஸ்திர ரீதியாக நடத்தி வைக்க வேண்டும். கோணலான மார்க்கத்தில் போகக் கூடாது. ஏனென்றால் நமக்குள்ளே எம்பெருமான் இருக்கிறான்- புரி சயனாது புருஷ:

விஷ்ணு சஹஸ்ரநாமத்திலே 'பூதாத்மா'ன்னு ஒரு நாமம் வருகிறது. பரம பவித்ரமான ஆத்மா, பாவனமான ஆத்மா... என்று இதற்கு அர்த்தம். அப்படிப்பட்டவன் நமக்குள்ளே இருக்கிறான்.

அப்படியானால் இயல்பான ஒரு சந்தேகம் வருகிறது. நமக்குத் தலைவலி வந்தால் அவனுக்கும் வருமா? ஒரே சளி பிடித்து மூக்கை அடைக்கிறது; அவனுக்கும் அடைக்குமா...? நமக்கு ஏற்படும்படியான விசார, விகாரங்களெல்லாம் அவனுக்கும் உண்டா என்கிற கவலை

# "ஆன்லைன் இருக்க" கவலை எதற்கு ?

**வா**சலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது.

சோமு எழுந்து வாசற்பக்கம் சென்றான். சென்றவனுக்கு ஆச்சரியம் காத்திருந்தது. கல்கத்தாவிலிருக்கும் அவனுடைய அப்பா டாக்சியில் வந்து இறங்குகிறார்.

"அடடே, வாங்கப்பா, ஒரு லெட்டர் போடக்கூடாதா? நானே உங்களை வந்து கூட்டிகிட்டு வந்திருப்பேனே. ஆமா அம்மா வரலையா?" என்றபடி கேள்விகளை அடுக்கினான் சோமு.

அதற்குள் சமையலறையிலிருந்து வெளியே வந்த சோமுவின் மனைவி மீனாட்சி தன் மாமனாரை வரவேற்றாள்.

"உம்... அப்பாடி, என்ன சோமு சௌக்கியமா? எங்க கம்பெனி விஷயமா நான் இப்பத்தான் மெட்ராஸ் பக்கமே தலைகாட்ட முடிஞ்சது. அம்மா நல்ல சௌக்கியம். உங்களையெல்லாம் ரொம்ப கேட்டதா சொல்லச் சொன்னா."

"என்னடா சோமு, இன்னிக்கு ஆபீஸ் லீவா? ஆமா நம்ம கட்டிப்பய எங்கே?" என்றபடியே கல்கத்தா ரசகுல்லா டின்னையும் பேரனுக்கு வாங்கி வந்த பிஸ்கட் பாக்கெட்டையும் தனது பையிலிருந்து எடுத்து சோமுவிடம் நீட்டினார்.

"ஆபீஸ்லாம் லீவு இல்லப்பா. நான் வேலை செஞ்ச பழைய கம்பெனியிலிருந்து என்னோட PF பணம் கிடைச்சது. அதை ஒரு நல்ல ஃபைனான்ஸ் கம்பெனியில முதலீடு பண்ணனும். அதுக்காகத்தான் 1/2 நாள் லீவு போட்டிருக்கேன்".

எந்த கம்பெனியில் டெபாசிட் பண்ணலாம்னு முடிவு பண்ணிட்டியா சோமு?" என்றபடி தனது மூக்குக் கண்ணாடியை கழற்றி துடைத்துக் கொண்டார்.

"இல்லப்பா. என் ஃப்ரெண்டு ஒருத்தர் அவருக்கு தெரிஞ்ச ஃபைனான்ஸ் கம்பெனிக்கு என்னை கூட்டிட்டு போறேன்னு சொல்லியிருக்கார். இப்ப அவரு வந்துடுவாரு. அவருக்காகத்தான் நான் வெயிட் பண்ணிட்டிருக்கேன்".

"ஆனா, சோமு, நீ கஷ்டப்பட்டு சம்பாதிச்ச பணத்தை ஒரு நம்பிக்கையான கம்பெனியிலதான் முதலீடு பண்ணனும். உன்னுடைய சௌகரியத்துக்கு ஏத்தமாதிரி டெபாசிட் முறைகள் இருக்கணும். அதோட நாம முதலீடு பண்ண பணத்தோட வட்டி 'டாண்' னு நமக்கு வந்துடணும் இல்லையா? நம்மளோட பணத்தை டெபாசிட் பண்ணிட்டு வயத்துல நெருப்பை கட்டிகிட்டு இருக்கக்கூடாது. என்ன நான் சொல்றது ?".

சமையலறையிலிருந்து மாமனாருக்காக காபியை கொண்டு வந்த மீனாட்சி "நீங்க சொல்றது சரிதான் மாமா. ஆனா நீங்க இந்த மாதிரி பூடகமா பேசறதப் பாத்தா உங்க மனசில ஒரு ஃபைனான்ஸ் கம்பெனிய நினைச்சுகிட்டுதான் பேசறீங்கன்னு நான் நினைக்கிறேன் சரியா?" என்றாள்.

மருமகளை மனதுக்குள் மெச்சிக் கொண்டே காபி டபராவை வாங்கிக் கொண்ட குருசாமி "நீ சொல்றது நூத்துக்கு நூறு உண்மைதாம்மா. என் மனசில் இருக்கிற ஒரே நம்பிக்கையான கம்பெனி Online Financeதான். ஆமாம்பா, மெட்ராஸ் கம்பெனியான இந்த ஃபைனான்ஸ் கம்பெனியோட கல்கத்தா கிளையிலதான் நான் டெபாசிட் பண்ணியிருக்கேன்".

"அப்படி என்ன மாமா அந்த கம்பெனிகாரங்க செய்றாங்க"

"அவங்களோட தனிப்பட்ட முறையில் செய்யும் சேவை மற்றும் நேர்த்தியான தொழில் முறை எல்லா டெபாசிட்தாரர்களுக்கும் பிடிக்கும்".

"பணத்துக்கு எப்படி மாமா கியாரண்டி கிடைக்கும்"

"அதான் நான் சொல்ல வந்தேன். ஆன்லைனின் CARE A (FD) Rating நம்மளோட பணத்துக்கு அதிக பாதுகாப்புக்கு உறுதியளிக்குது".

"இவங்களோட வட்டி விகிதம் RBI போட்ட சட்ட திட்டங்களுக்கு உட்பட்டது. ஆங்... ஒரு விஷயத்தை சொல்ல மறந்துட்டனே..."

கேள்விக்குறியோடு சோமுவும், மீனாட்சியும் அவரைப் பார்க்க.

"எங்க கம்பெனி முதலாளியோட அண்ணன் ஒரு NRI. சிங்கப்பூர்ல அமோகமா பிஸினஸ் பண்ணிட்டிருக்காரு. அவர் கூட ஆன்லைன்லதான் டெபாசிட் பண்ணியிருக்காருன்னா எந்த அளவுக்கு NRIக்கு ஆன்லைன் மேல நம்பிக்கை இருக்குன்னு பார்த்துக்கோயேன்".

"எப்படி அந்த கம்பெனி பத்தின தகவல்கள் கிடைக்கும் மாமா?" மீனாட்சியிடம் ஆர்வம் துளிர் விட்டிருந்தது.

தனது பர்ஸிலிருந்த ஒரு கார்டை எடுத்து பார்த்துக் கொண்டே "நீங்க 8276768/8265301/8234072 - ங்ற நம்பர்ல டெலிபோன்ல தொடர்பு கொள்ளலாம். இல்லன்னா 8267008 ங்ற பேக்ஸ் நம்பரில் ஆன்லைனை தொடர்பு கொண்டீங்கன்னா உங்களுக்குத் தேவையான முழு விவரமும் உங்க வீட்டிற்கே வந்து சேரும்."

சற்று இடைவெளிவிட்டு காபி டம்ளரை காலி செய்த அவர் "ஆனா, ஒன்னு மட்டும் நிச்சயமா சொல்றேன். ஆன்லைனோட தனிப்பட்ட சேவையை உணர்ந்துட்டீங்கன்னா, பல பேருக்கு நீங்களே சிபாரிசு செய்வீங்க. இப்ப நான் உங்களுக்கு சிபாரிசு பண்ண மாதிரி."

இதுவரை அவர் பேசுவதை உன்னிப்பாக கவனித்துக் கொண்டிருந்த மீனாட்சி "மாமா, அந்த கார்டை கொஞ்சம் கொடுங்க. அடுத்த வீட்டுக்கு போயிட்டு ரெண்டு நிமிஷத்தில திரும்பி வர்றேன்.

சோமு அவளை புதிரோடு பார்க்க குருசாமி ஆன்லைனின் கார்டை நீட்டியபடியே "என்னம்மா, திடீர்னு கிளம்பிட்டே?"

"ஆன்லைனுக்கு போன் பண்ணத்தான் மாமா". குரலில் உற்சாகம் துள்ள வாசலுக்கு போனாள்.




வந்து விடுகிறது!

நமக்குள்ளே அவன் இருந்தாலும் இந்த சரீரத்துடன் சம்பந்தமில்லாமல் தான் இருக்கிறான்.

அப்படி அவன் இருக்கும்படியானது அவனுடைய அகடிதகடனா சாமர்த்தியம் என்பது! எல்லாம் வல்லவனான பரமாத்மாவுக்கு இது பெரிய விஷயமில்லை.

உபநிஷத் நம் சரீரத்தையே ஒரு மரமாகச் சொல்கிறது. (இதையே கீதையில் பதினைந்தாம் அத்தியாயத்திலும் பார்க்கலாம்) அந்த சரீர மரத்தின் இடது பக்கத்திலே நிறைய கிளைகள். அதிலே இரண்டு பக்ஷிகள் உட்கார்ந்திருக்கின்றன. ஒரு பறவைக்குத் திடமான இறக்கைகள் இருக்கின்றன. இன்னொரு பறவைக்கு அதெல்லாம் கிடையாது. இரண்டும் பக்கத்து-பக்கத்திலேதான் உட்கார்ந்திருக்கின்றன.

இந்த உடம்புக்கு ஏற்படக் கூடிய சுகம், துக்கம், ரோகங்கள் எல்லாம் இறக்கையில்லாத பறவை இருக்கே... அதுக்கும் பூரணமாய் ஒட்டிக் கொள்கிறது. ஆனால் அதன் பக்கத்திலே உட்கார்ந்திருக்கிற பறவைக்கு எதுவும் ஒட்டிக் கொள்வதில்லை!

எவன் பரமாத்மாவை தியானம் பண்ணுகிறானோ அவன் இதைப்போல ஒன்றும் 'ஒட்டிக் கொள்ளாமல்' கதி அடைவான் என்பது பலசுருதி. (விளக்கம்)

இந்த விஷயத்தை குருகுலத்திலே, ஒரு கார்த்திகை மாசம் உபாத்யாயர் சொல்லிக் கொண்டிருந்தார்.

எல்லா மாணவர்களும் ஒரே மாதிரி இருப்பார்களா...? அதிலே ஒரு மாணவன் எழுந்தான். "ஆசார்யரே இந்த விஷயத்தில் எனக்கு ரொம்ப பெரிய சந்தேகம்" என்றான். "இந்த மாதிரி இரண்டு பறவைகள். ஒரு பறவைக்கு மட்டும் ஒட்டும், இன்னொன்றுக்கு ஒட்டாதுன்னா நான் நம்ப மாட்டேன்..." என்றான்.

உபாத்யாயர் பார்த்தார். "நானா அப்படிச் சொல்கிறேன்? ஆயிரம் தாய் தந்தையருக்குச் சமானமாக நம்மிடம் அன்பு கொண்டிருக்கிற சாஸ்திரம்-வேதம் அல்லவா அப்படிச் சொல்கிறது! நீ விதண்டாவாதம் பண்ணலாமா...?" என்றார்.

"அப்படியே வேதம் சொன்னாலும் அதை நான் ஏற்றுக் கொள்ளத் தயாராயில்லை! ஏதாவது ஆதாரம் காண்பிக்கணும் நீங்கள்... இல்லாவிட்டால் நான் நம்பமாட்டேன்'' என்றான் மாணவன்.

இன்னொரு குருவாக இருந்தால் மாணவனை அடித்திருப்பார். ஆனால் இவர் ரொம்ப சாத்விகர். அடிக்கவில்லை.

"உட்காரு!" என்று மாணவனை அமர்த்தி விட்டார். "இப்ப நீ கேட்கிற விஷயம் எனக்குப் புரியவில்லை. அப்புறமா விளக்கறேன்..." என்றார்.

அன்றையிலிருந்து அந்தப் பையனுக்கு கர்வம் அதிகமாயிடுத்து. 'நான் கேள்வி கேட்டு ஆசார்யனுக்கு பதில் சொல்லத் தெரியலை...' அப்படின்னு ஒரு கர்வம்! எல்லோரிடமும் இதையே போய்ச் சொன்னான்!

குருவோ பொறுமைக்கு நிலைக்களனாய் இருந்தார்.

மார்கழி மாசம் வந்தது. திருப்பாவை இருபத்தேழாவது பாசுரம் படிக்க வேண்டிய நாள். அது எல்லோருக்கும் ரொம்பப் பிடித்தமான பாசுரம். ஏனென்றால் இரண்டாவது பாசுரம் மாதிரி அது விரதம் இருக்கச் சொல்வதில்லை; பாத்திரத்தின் மேலே ஒரு முழத்துக்கு நெய் மிதக்கிற மாதிரி சர்க்கரைப் பொங்கல் தயார் பண்ணி எல்லோரும் கூடி விருந்து அதை அனுபவிக்கச் சொல்கிறது! அந்த நெய் முழங்கை வழியே வழிந்து ஓட, அதை இன்னொருத்தர் ஏந்திக் கொள்ள, அவர் கையிலிருந்தும் வழிந்தோட மேலும் ஒருத்தர் கைநீட்டி ஏந்தணுமாம்...!

அப்படிப்பட்ட சர்க்கரைப் பொங்கல் அன்றைக்கு குருகுலத்திலே தயாரானது.

விதண்டாவாதம் பண்ணிய மாணவனை அழைத்து நிறைய சர்க்கரைப் பொங்கலை வாரிக் கொடுத்தார் குரு. அவனுக்கு ரொம்ப சந்தோஷம்! ஆசார்யரே கொடுக்கிறாரே! இன்னொரு கை எடுத்துப் போட்டார். 'நன்றாகச் சாப்பிடு' என்றார்.

திருப்தியாகச் சாப்பிட்ட அந்த மாணவனுக்கு, அந்த சர்க்கரைப் பொங்கலே ஞானத்தை உண்டாக்கியது!

அதை அடுத்த வாரம் சொல்கிறேன்!

(தொடரும்)

கே. ரவிசங்கர்

# வீட்டு துட்டு



கிட்டதட்ட இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு, பள்ளி நண்பன் வாசுவைச் சந்திக்கிறேன். என்னை அறியாமல் என் கை நெற்றியைத் தொட்டுப் பார்த்துக் கொண்டது. 'வீட்டு துட்டு' என்று உதட்டில் உச்சரித்து, சிரித்துக் கொண்டேன். ஒன்றா இரண்டா? நூற்று ஏழு டிகிரி ஜுரம் அடிக்கக் காரணம் இந்த வீட்டு துட்டுதானே! தேர்தல் ஜுரம், கிரிக்கெட் ஜுரம், பரீட்சை ஜுரம் எல்லாவற்றையும் தூக்கிச் சாப்பிட்டு விட்டது இந்த ஜுரம். பார்க் ஷெராட்டனில் நுழையும் போது அந்த ரப்பர் பேண்ட் கட்டிய வாசுவின் டிராயர் பாக்கெட் பை கடிகார பெண்டுலம் மாதிரி என் கண்முன் ஆட, பழைய நினைவுகள், தியாகி அன்னை சத்யவதி உயர்நிலைப் பள்ளி (ESTD 1924) முன் போய் நின்றது.

நானும் வாசுவும் வலது கைக்குப் பத்து நோட்டீசும் இடது கைக்குப் பத்து நோட்டீசும் வாங்கி, பாக்கெட்டில் திணித்துக் கொண்டோம்.

"என்னடா நோட்டீஸ் இது?" பாட்டி வழியில் மடக்கினாள்.

'அன்புடையீர், வணக்கம்! சிவப்பிரகாசம் மைதானத்தில் வரும் திங்கட் கிழமை முதல் பத்து நாள் தொடர்ந்து சைக்





இன் விடப் போகிறார் மோகன சுந்தரம். கொடுத்துச் சிவந்த கைகள், பாரி வள்ளல் எம்.ஜி. ராமச்சந்திரன் (ஆலந்தூர் எம்.எல்.ஏ) அவர்கள் தொடங்கி வைப்பார். பத்தாவது நாள் பம்மல் ரீட்டா டான்ஸ் உண்டு. குள்ளன் குணா டமாஸ் உண்டு. அனைவரும் வருக!'

"புளுகுண்ணி. எம்.ஜியார் வர மாட்டாரு. உங்களையெல்லாம் ஏமாத்தறான். ராத்திரியெல்லாம் யார் போய்ப் பாக்கறா. குடிச்சிட்டுத் தூங்குவான்."

பாட்டி மாதிரி எனக்கும் சில சந்தேகங்கள் உண்டு. குனிப்பது, பாத்ரூம் போவது போன்ற சமாசாரங்கள் எப்படி நடக்கும் என்று. இதற்காகவே நைட்ஷோ பார்த்துவிட்டு நைஸாக நோட்டம் விட வேண்டும் என்று நினைத்துக் கொள்வேன். பாட்டியும் லேசுப்பட்டவளில்லை. காய்கறி, பால் வாங்கும் சாக்கில் யார் மீதும் படாமல் தள்ளி நின்று பார்த்துவிட்டு ஓசைப்படாமல் வருவாள். காமெண்ட் அடிப்பாள்.

மறுநாள் நானும் வாசுவும் அந்த மைதானத்திற்கு ஓடினோம். வாசு எப்போது வாசல்படி தாண்டினாலும் ஒரு சிறு பவுடர் அப்பல் ஒப்பனை இருக்கும். நெற்றியில் விபூதிக் கீற்று இருக்கும். எதையாவது மென்று கொண்டே இருப்பான். இந்தப் பழக்கத்தால் 'புறாவாய்' வந்திருந்தது. மைதானத்தைச் சுற்றி, வட்டமாக கம்புகள் நட்டு, கயிற்றால் இணைக்கப்பட்டிருந்தது. குச்சி ஐஸ், வேர்க்கடலை, ஆள்வள்ளிக் கிழங்கு, கமர்கட்டு விற்பவர்கள் கடை போட்டு பேசிக் கொண்டிருந்தார்கள்.

வாசு திடீரென்று காணாமல் போனான். தெரியும். எதையாவது தனியாகத் தின்று விட்டு வருவான். சாப்பிட்ட பொருளின் கலர் பூச்சு நாக்கில் தெரிய, திருட்டு முழி முழிப்பான். சாப்பிட மட்டும் யாரையும் கூட்டு சேர்க்க மாட்டான். நிறைய காசு கொண்டு வருவான். இதெல்லாம் வீட்டிலிருந்து லவுட்டிக் கொண்டு வருவது. காசு இருக்கும் இடம் கண்டுபிடிக்க முடியாது. டிராயர் பாக்கெட்டில் காசைப் போட்டு, முனையை ரப்பர் பேண்டால் கட்டி விடுவான். பாக்கெட்டில் கை விட்டால் மொட்டையாக நிற்கும். கண்டுபிடித்து விட்டால், 'வீட்டு துட்டு' என்று சொல்லி விடுவான். நாங்களும் 'வீட்டில் ஏதாவது சொல்லுவார்கள்' என்று பயந்து போய் விட்டு விடுவோம்.

படபடவென்று சத்தம் கேட்க, சைக்கிள் பின் சக்கரத்தில் போர்ன்விட்டா டின் கட்டி சைக்கிளை ஓட்டி வந்தான், மோகனசுந்தரம். பல வித்தைகள் செய்து காண்பித்தான். கைதட்டலும் விசிலும் பறந்தன. எல்லாம் முடிந்து, பிறகு அடிவயிற்றை ஹாண்டில்பாரில் சாய்த்துக் கொண்டு குரங்கு பெடல் அடித்தவாறே கையால் எல்லோரையும் கும்பிட்டான். 'தட்டெடுக்கும் நேரம்' என்று சில பேர் நழுவினார்கள். சிலர் ஐந்து பைசா பத்து பைசா நாணயங்களை போட்டு, கைகுலுக்கினார்கள். யாரோ ஒருவன் ஆள்வள்ளிகிழங்கு வாங்கிக் கொடுத்தான். அதைப் பார்த்து, மற்றொருவன் வேர்க்கடலை வாங்கி, உள்ளங்கையில் தேய்த்து, ஊதிக் கொடுத்தான். வயதான கிழவி ஒருத்தி டீ வாங்கி முந்தானையால் பிடித்து ஆற வைத்து, அவனுக்கு ஊட்டினாள். கூட்டம் புல்லரித்து ஆரவாரித்தது. யாரோ மைக்கில் 'பொருளுக்கு பதில் சன்மானமாகக் கொடுக்கவும்' என்று அறிவித்தார்கள்.

**"தங்க நகைக்கு லோன் கிடைக்கும்னு சொன்னாங்களே சார்..."**

**"உங்களுக்கு எவ்வளவு லோன் வேணும்?"**

**"மகளோட கல்யாணத்துக்கு அஞ்சு பவுன்ல சங்கிலி வாங்கணும்; அதுக்கு எவ்வளவு தேவையோ அதைக் கொடுங்க சார் போதும்!"**

**— சீர்காழி வி. ரேவதி**

இதற்கிடையில் யாரோ கொடுத்த சோடாவைக் குடித்து, மீதியை ஸ்டைலாக முகத்தில் பீச்சி அடித்துக் கொண்டான். பார்க்கப் பார்க்க எனக்கும் அவன் மீது மனிதநேயமும் அன்பும் சுரந்து, ஏதாவது வாங்கிக் கொடுக்க துருதுருக்க ஆரம்பித்தது. பரபரத்து, வாசுவைக் கேட்டேன். மறுத்தான். அரித்தேன். அவனைக் கிட்டத்தில் இழுத்து, தொடை வழியாக டிராயர் பாக்கெட்டைத் தொட்டுப் பார்த்தேன். காசு மூட்டை கையில் உறுத்தியது.

என்னை உதறித் தள்ளி விட்டு, 'ரன்னிங்

ரேஸ்டா' என்று கழன்று கொண்டான். இன்னும் கூட கூட்டத்தில் சில பேர் ஏதேதோ வாங்கிக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். பார்க்கப் பார்க்க ஏக்கம் வாட்டியது. மறுபடியும் வாசுவை தேடிப் பிடித்து, கெஞ்சினேன். 'இது வீட்டு துட்டு' என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே வாயை மூடும் போது வேர்க்கடலை பர்ப்பியின் துகள்கள் பல்லிடுக்கில் ஒட்டிக் கொண்டிருந்தது.

ஏமாற்றத்தில் சவக்களை தோன்றி, ஏக்கத்தோடு வீட்டிற்குத் திரும்புகையில், லேசாகக் குளிர் எடுத்து, உடம்பு சுட ஆரம்பித்தது. வீட்டில் போய்ப் படுத்து, நெற்றியைத் தொட்டுப் பார்த்ததில் 107 டிகிரி ஜுரம்.



நமுட்டுச் சிரிப்பை அடக்கினேன். எவ்வளவோ விஷயம் பேசினாலும் அந்த 'வீட்டு துட்டு' விஷயத்தை டச் பண்ணவில்லை. தைரியமில்லையா, இல்லை வெட்கமா தெரியவில்லை. என்னை மாதிரி அந்தச் சம்பவத்திற்கு சரித்திர மதிப்பு கொடுக்க வேண்டிய அவசியம் அவனுக்கு இருக்குமா?

"லூசுடா... நீ இத போய்..." என்று அலட்சியமாக விலக்கி ஒதுக்குவான். நான் இதையெல்லாம் மிகுந்த வாஞ்சையோடு யோசித்துக் கொண்டிருக்கையில், வாசு சக்கையாகத் தின்று கொண்டிருந்தான். பில் வந்தது. முன்னூறு ரூபாய்! உள்ளுக்குள் 'பக்' என்றது. நான் இவ்வளவு எதிர்பார்க்கவில்லை. என்னதான் ஸ்டார் ஓட்டல் என்றாலும் அவ்வளவு பணம் இருக்குமா? கிட்டத்தட்ட இருநூற்றி எண்பது ரூபாய் தேற்றி பில் ஃபோல்டரில் வைத்து விட்டு, வாசுவைப் பார்த்தேன். வாசு எதுவும் கண்டுகொள்ளாமல் சோம்புவை மென்று கொண்டு, பல்லை ஆராய்ந்து கொண்டிருந்தான். இப்படியே பத்து நிமிடம் ஓடியது.

மறுபடியும் மேல் பாக்கெட், கீழ் பாக்கெட், ஆபீஸ் பேக் என்று குடைந்து, தேடியதில் வீட்டுக்குப் போகப் பத்து ரூபாய் தேறியது. வாசுவிற்கு நிலைமை புரியாமல் இல்லை. அவன்தான் நிறைய சாப்பிட்டான். நானே சுத்தமாக துடைத்துக் கொடுத்தது வருத்தமாக இருந்தது.

"சாயம் போகாதுன்னு சொன்னீங்க; தண்ணில நனைச்சதும் சாயம் கொட்டுதே சார்...?"
"ஒரு ரெண்டு மூணு 'வாஷ்' வரைக்கும்தான் சார் அப்படி இருக்கும்; அதுக்குப் பிறகு பாருங்க!"
— சீர்காழி. வி. ரேவதி



ஒருவழியாக வெளியே வந்தோம். பர்சைத் திறந்து, வாசு பாதி மடித்து வைத்திருந்த பான் பராக்கை எடுத்துப் போட்டுக் கொண்டான். பர்சை கவனித்ததில் அவனிடத்தில் சுத்தமாகப் பணம் இல்லை! அதான் கொடுக்கவில்லை என்று நினைத்துக் கொண்டேன்.

சின்ன வயசு 'வீட்டு துட்டு' புத்தி போய் விட்டது சந்தோஷம்தான். ஆனால் ஆமெக்ஸ் (AMEX) கிரெடிட் கார்ட் பர்சில் பளிச்சிட்டது. என் பணத்தையெல்லாம் எடுத்துக் கொண்டு இந்த கார்டை உபயோகித்து தர்மசங்கடத்தை தவிர்த்திருக்கலாமே என்று தோன்றியது.

"பெரிய ஆள்பா... நீ ஆமெக்ஸ் கிரெடிட் கார்டெல்லாம் வச்சுருக்க..." ஆற்றாமையால் கிண்டினேன்.

"இந்த கார்ட மெயினா வீட்டுக்குத்தான் யூஸ் பண்றேன். வீட்டு புரொவிஷன், துணி மணியெல்லாம் இதத் தேச்சுதான் வாங்குவேன். வேற எதுக்கும் யூஸ் பண்றதில்லை..."

நான் நெற்றியைத் தொட்டுப் பார்த்துக் கொண்டேன். இன்னொரு சரித்திர மதிப்பை லேசான சூட்டில் உணர்ந்தேன்.

"பேப்பர் விலையெல்லாம் ஏறிப் போச்சுங்க..."
"ஓகோ... உங்க வார இதழ் விலையை ஏத்தப் போறீங்கன்னு சொல்லுங்க."
"அதுக்கில்லீங்க. இனிமே நீங்க சிறுகதை எழுதி பேப்பரை வேஸ்ட் பண்ணாம, 'ஜோக்' எழுதியனுப்புங்க, போதும்னு சொல்ல வந்தேன்."
— அகில்

உங்களை மட்டுமன்றி உங்கள்

"தலைமுறையினர் மீதும் அக்கரை

கொண்டுள்ள ஒரே நிறுவனம்.

# சுபிக்ஷா டெபாசிட்டுகள்

24% + 25%*

| அட்சய பத்திரம் | தங்கத் தொட்டில் |
| --- | --- |
| ரூ.10,000/- மூன்று ஆண்டுகளுக்கு முதலீடு செய்து காலாண்டு வட்டியாக ரூ.550/- பெறுவீர் 4 ஆம் ஆண்டு முதல் வருடந்தோறும் ரூ.700/- கிடைக்கும். | ரூ.300- வீதம் 24 மாதங்கள் செலுத்தி ரூ.2,500/- இருபது ஆண்டுகளுக்கு மற்றும் போனஸ் ரூ.5,00,000/- மதிப்புள்ள தேக்கு மரங்கள். |




ஃபைனான்ஸ் & இன்வெஸ்ட்மென்ட்ஸ்

63, எல்டாம்ஸ் ரோடு, இரண்டாம் தளம்,

தேனாம் பேட்டை, சென்னை-18. தொ. பே.: 453024

*இந்த வட்டி விகிதம் சுபிக்ஷா டெபாசிட்டுகளுக்கு மட்டும் பொருந்தும்

# நேற்று சசி... இன்று குமாரி... நாளை யார்?



• கைதாகும் இந்திரகுமாரி

**போ**லீஸ், இத்தனை விரைவில் தன்னைக் கைது செய்ய வரும் என்று நினைத்திருக்க மாட்டார் இந்திரகுமாரி. ஆனாலும், சமாளித்துக் கொண்டு கைது செய்து, கொண்டுசெல்லும்போது சிரித்துக் கொண்டே 'எவ்வளவு படங்கள் வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள்' என்று போட்டோகிராபர்களைப் பார்த்துச் சொன்னார். இத்தனை ஊழல் குற்றச்சாட்டுக்களைச் சுமத்தியும் கலங்காமல் உல்லாசமாகப் போலீஸுடன் கிளம்பும் போக்கு ஒரு தனி 'கலாசாரமாக' மாறி வருகிறது!

1991-ம் ஆண்டு வரை வடபழனி கோயிலின் பின்புறத்தில் சிறிய வாடகை வீட்டில் வசித்து வந்தவர் இந்திரகுமாரி. பணக்கஷ்டம் காரணமாக, மூன்று முறை பிறரை ஏமாற்ற முயன்று கைது செய்யப்பட்ட முன் அனுபவம் உண்டு இவருக்கு.

**ச**ரி. எப்படி கைது செய்யப்பட்டார் இந்திரகுமாரி? ஆக்டோபஸ் முகங்களைக் கொண்ட அ.தி.மு.க. ஊழல்களை நிரூபித்து, சம்பந்தப்பட்ட நபர்களைக் கூண்டிலேற்றுவது எப்படி என்பது கலைஞர் அரசுக்குத் தலைவலியாக இருந்த விஷயம். சு. சுவாமி வேறு அடிக்கடி இந்த விவகாரத்தில் கடுப்படித்துக் கொண்டிருந்தார். ஏற்கெனவே சி.பி.ஐ. சில வழக்குகளை விசாரித்துக் கொண்டிருக்கும்போது, தங்கள் பங்குக்குத் தாங்களும் செயல்படுவது சரியாக வருமா என்பது யோசிக்கப்பட்டது. 'விசாரணைக் கமிஷன் போடலாம்' என்று வந்த யோசனை எடுத்த எடுப்பில் கைவிடப்பட்டது. கமிஷன்களுக்கு நம் நாட்டில் அவ்வளவு நல்ல பெயர்!

அப்போதுதான் முதல்வரின் செயலாளர்களில் ஒருவர், ஒவ்வொரு துறையில் நடந்த ஊழல்களைப் பற்றியும் மோசடிகளைப் பற்றியும், சம்பந்தப்பட்ட துறைத் தலைவரே போலீஸில் புகார் கொடுத்து, வழக்குப் பதிவு செய்து விசாரிக்கலாம் என்று சிறந்த ஐடியா கொடுத்திருக்கிறார்.

அந்த ரீதியில்தான், ஸிப்காட் தலைவர் கொடுத்த புகாரின் மீது வழக்குப் பதிவு செய்யப்பட்டு ஜெ. கூட்டாளிகள் வாங்கிய சொத்து முடக்கப்பட்டது. இப்போது கைத்தறி செயலாளர் புகாரின் பேரில் இந்திரகுமாரி கைது! எல்லா துறையிலிருந்தும் புகார் கொடுக்க ஏற்பாடுகள் நடக்கின்றன.



"சமூகக் கதையை எழுதியிருக்கீங்க. ஆனால் அதை சரித்திரக் கதைன்னு சொல்றீங்களே, எப்படி?"

"சரியாகப் படிச்சுப் பாருங்க சார்! கதா பாத்திரங்களுக்கெல்லாம் சம்புவராயர், நந்தி வர்மன், பெருந்தேவி, குந்தவை, அருள் மொழின்னு பெயர் வெச்சிருக்கேனே!"



"நல்ல காலம்! நீங்க பண்ணியிருந்த ஆக்ஸிடெண்ட் பெனிஃபிட் இன்ஷுரன்ஸ் எங்கே வேஸ்ட் ஆயிடப்போகுதோன்னு வருத்த மாயிருந்தேன்!"

– குமார்

## பறக்கும் தடுப்பூசிகள்!

இரண்டு பிரிட்டிஷ் மருத்துவ விஞ்ஞானிகள், கடிக்கும் கொசுக்களையே 'பறக்கும் ஸிரிஞ்சுகளாக'ப் பயன்படுத்தி மலேரியா நோய்க்கான தடுப்பூசி போடும் முறையை ஆராய்ந்து வருகிறார்கள். கொசுக்களின் வாயில் சுரக்கும் எச்சிலுடன் ஓரளவு செயலிழக்கப்பட்ட மலேரியா கிருமிகளின் சிறு துகள்களைக் கலந்து அத்திரவத்தை கொசுக்களின் உடலில் செலுத்தி விடுகின்றனர். இக்கொசுக்கள் மனிதர்களைக் கடிக்கும்போது இந்தத்திரவம் ஒரு தடுப்பூசி மருந்து போல மனித உ[illegible]ங்களில் செலுத்தப்படுகிறது.

—ஆதாரம்: ஹிந்து

தகவல்: ஏ. பிரசன்னா

இட்டத்தட்ட 16 கோடி மதிப்புள்ள 11,25,200 வேஷ்டிகளும், 12,56,400 சேலைகளும், மற்றும் பள்ளிச் சீருடைகள் வாங்குவதிலும்தான் ஊழல். ஐந்து கோடி 'சுருட்டல்' என்பது தோராயக் கணக்கு. ஏற்கெனவே சத்துணவில் போடும் முட்டைக்கு அதிக ரேட் நிர்ணயித்து இந்திரகுமாரி பல லட்சம் சுருட்டியதாகப் பேச்சு உண்டு.

நலிவுற்ற கோயில்களுக்காகவும் கட்சி கட்டட நிதிக்காகவும் கோடி கோடியாக ஜெ.விடம் நிதி கொடுத்தவர் இ.குமாரி. சமூகநலத் துறையை, சசிகலா நலத் துறையாக மாற்றுகிறார் என்று இவரைப் பற்றி கிண்டலாகப் பேசுமளவுக்கு உ.பி. சவுடன் நெருக்கமாய் இருந்தவர்.

"வேட்டி சேலை விவகாரம், தமிழ்நாடு பஞ்சாலைக் கழகம் ஏற்றுக் கொண்ட பொறுப்பு. அதற்குத் தலைவர் இருக்கிறார். அரசுக்கு எந்தச் சம்பந்தமும் கிடையாது" என்று இந்திரகுமாரி கோர்ட்டில் சொல்லலாம். ஆனால் பஞ்சாலைக் கழகத்தின் நிர்வாக இயக்குனர், கோல்மால்கள், அமைச்சர் சொன்னதன் பேரில்தான் நடந்தன என்று சி.பி. சி.ஐ.டி.யிடம் வாக்குமூலமே கொடுத்து விட்டார். இந்திரகுமாரியும், எல்லா கோப்புகளிலும் ஜெ. கையெழுத்துப் போட்டிருக்கிறார் என்று துணிந்து சொல்லி விட்டார்.

இது, மேம்போக்காகப் பார்ப்பதற்கு, தப்பித்துக் கொள்கிற மனோபாவமாகத் தெரிந்தாலும், ஏதோ ஒரு திட்டத்தோடுதான் இந்திரகுமாரி - ஜெ. இருவரும் சேர்ந்து செயல்படுகிறார்களோ என்று அரசு வட்டாரத்திலும் தி.மு.க. வட்டாரத்திலும் சந்தேகப்படுகிறார்கள்.

இந்திரகுமாரி இப்படிப் பழிபோட்டதும், அவசரப்பட்டு கலைஞர் அரசு, தன்னைக் கைது செய்து விட்டால், பின்னர் தான் அனுதாபம் சம்பாதித்துக் கொண்டு விடலாம் என்று ஜெ. கருதுவதாகச் சொல்கிறார்கள்!

சுடுகாட்டுக் கொட்டகை விவகாரத்தில் எல்லா விசாரணைகளும் முடிந்துவிட்டன. த.நாடு மின்சார வாரியத் தலைவரிடமிருந்து சி.பி.சி.ஐ.டிக்கு, நிலக்கரி ஊழல் பற்றிய புகார் எந்த நேரமும் கொடுக்கப்படலாம். ஆஸிட் வீச்சு, அடிதடி விவகாரத்தில் ஈடுபட்டவர்களும் மாட்டிக் கொள்ளும் வாய்ப்பு பலமாக இருக்கிறது.

மொத்தத்தில் செப்டம்பரில் உள்ளாட்சித் தேர்தல் நடக்கும்போது அ.தி.மு.க. அமைச்சரவையில் இருந்த பாதிக்கு மேற்பட்டோர் கம்பிகளுக்குப் பின்னால் இருக்கக்கூடும்!

- ப்ரியன்

# காங்கிராட்ஸ் அகிலா கார்த்திகேயன்!

☑ ஷில்பா ஷெட்டியைப் போட்டு விளம்பரம் தேடும் இந்நாளில் 'ரேகா ஷெட்டி'யின் உபயோகமான பேட்டியைப் பிரசுரித்து, 'கல்கி' தன் தரத்தை நிரூபித்து விட்டது!
திருச்சி - 17, உஷா முத்துராமன்.

☑ வெற்றிப் படிகளில் ஏற, ரேகா ஷெட்டி தரும் ஆலோசனைகள் யாவும் நுகர்வோரை மனத்தில் கொண்டே வகுக்கப்பட்டிருக்கின்றன. இவரது வெற்றியின் ரகசியத்தை இதிலிருந்தே தெரிந்து கொள்ள முடிகிறது. அநேகமாக எல்லா நிறுவனங்களுமே தங்கள் பொருட்களை விற்பதில்தான் குறியாய் இருக்கின்றன. 'வாரண்டி பீரியட்' முடிந்த பிறகு பொருட்கள் பழுதடைந்தால் பணம் வாங்கிக் கொண்டு சீர் செய்து தரக்கூட இந்த நிறுவனங்கள் தயாராய் இருப்பதில்லை! இதைத் தவிர, பல கம்பெனிகள் தங்கள் பொருட்களை மிகைப்படுத்தியே விளம்பரம் செய்கின்றன. இவற்றில் 50% கூட உண்மை இருப்பதில்லை. பொது மக்களை ஏமாற்றும் இதுபோன்ற வியாபாரத் தந்திரங்கள் மாற வேண்டும்.
தஞ்சாவூர், வெ. முருகானந்தம்.

☑ இச்சாவின் தோஸ்த், 'டச்-அப் தண்டம்' தரும் செய்திகள் சுவாரஸ்யமாவே இருப்பா!
பொன்மலை, ஆர். பிரகாஷ்.

☑ மூப்பனார் அவர்களின் பேட்டியைப் படித்தோம். ஒவ்வொரு கேள்விக்கும் அவர் அளித்த பதில் அவரை ஒரு உண்மையான தலைவராகவும், நேர்மையான அரசியல்வாதியாகவும் இனம் காட்டியது.
சென்னை - 59,
ரொசாரியோ ரவிச்சந்திரன்.

☑ சட்டென்று ஏற்றப்பட்ட பெட்ரோல், டீசல், கேஸ் விலையைக் கண்டித்து எழுதப்பட்ட தலையங்கம் நல்ல சுரீர். அதிலும் என்னவெல்லாம் சப்பைக் கட்டு கட்டுவார்கள் என உத்தேசித்து பதிலும் சொல்லியிருந்தது சிறந்த கணிப்பு.
திருநெல்வேலி - 11,
எஸ். ஆர். ஸ்வாமி.

☑ இன்றைக்கு, கிராமங்களில் கூட நிறைய பேரிடம் டூ வீலர் இருக்கிறது. அவர்களெல்லாம் மிகவும் வசதியானவர்கள் என்று சொல்ல முடியாது! எத்தனையோ வழிகளில் செலவை சரிக்கட்டலாம். அதை விட்டு விட்டு, பெட்ரோல் டீசல் விலையை அதிகரிப்பது கொடுமை!
நெற்குப்பை, இ. மனோகரன்.

**ரூ. 20 பரிசுக் கடிதம்**

☑ "மக்களின் உணர்வுகளை மதிக்கும் அரசு!" என்னும் தலைப்பில் தாங்கள் எழுதியுள்ள தலையங்கம் என் உள்ளத்தைக் கவர்ந்தது. 1989 - ஆம் ஆண்டில் கலைஞர் முதல்வராக இருந்தபோது நான் அரசுப் பணியில் இருந்தேன். நான் பணியாற்றிய துறையின் தலைவர் ஓர் ஐ.ஏ.எஸ். அதிகாரி. அவரது நேர்மையற்ற செயல்களைக் குறிப்பிட்டு எதிர்ப்பு தெரிவித்ததால் நான் தற்காலிகப் பணிநீக்கம் செய்யப்பட்டேன். என் நிலைமையைக் கண்டு என் குடும்பத்தினர் மிகவும் வருந்தினர். என் மகள், முதல்வருக்கு ஒரு மனு எழுதியனுப்பினாள். அஞ்சல் மூலம் அனுப்பப்பெற்ற இந்த மனுவின் மீது உடன் நடவடிக்கை எடுக்க ஆணையிட்டார் முதல்வர். கல்வித் துறைச் செயலர் என் மகளை அழைத்து விசாரணை நடத்தினார். அதன் பிறகு சில நாட்களுக்குள்ளாகவே அந்த ஐ.ஏ.எஸ். அதிகாரிக்கு உரிய அறிவுரைகளுடன் ஆணை பிறப்பிக்கப்பட்டதுடன், என் வழக்கிலும் நியாயம் வழங்கப்பட்டது. "நேர்மையே நிர்வாகத்தின் அச்சாணி" என்பதைக் கலைஞர் உணர்ந்து ஆட்சி புரிவதை இன்று மட்டுமல்ல; அன்றும் என் அனுபவத்தில் கண்டேன்.
சென்னை - 91, ஏ. ஜே. எத்திராஜ்.

☑ 'பத்துக் கோடியை நூறு கோடியாக்கலாம்!' தலைப்பைக் கண்டதும் என்னையறியாமல் சிரித்து விட்டேன்! நமது ஆசாமிகள்தான் 'ஒரு ரூபாயை'யே நூறு கோடியாக்குகிறார்களே...?
திட்டக்குடி, பிரபா சரவணன்.

☑ பிரபஞ்சனின் 'கல்யாண அழைப்பும் கால் பவுன் காசும்' வாசித்தேன். நல்ல கதை. யதார்த்தம் கலந்த நடை. பாராட்டுக்கள்.
தஞ்சாவூர் - 2, புத்தகன்.

☑ முத்தான முதல்வருக்கு சவால் விடும் சில சொத்தை அரசு அதிகாரிகளையும், புல்லுருவிகளான சில எம்.எல்.ஏக்களையும் கலைஞர் சாமர்த்தியமாக சமாளிப்பார் என்று நம்புவோம்!
சென்னை - 61, ஆர். ராஜூ.

☑ 'தமிழ் லாங் அவார்டை' எழுதினது யாருங்கோ? ஒரு வார்த்தை 'கங்கிராஜு"லேட்' பண்ணலாம்னா, இப்படி 'நேமை' 'பினாக் அவுட்' பண்ணிட்டீங்களே! அச்சச்சோ!
வேலூர் - 6, எல். கோபாலகிருஷ்ணன்.
(தலைப்பிலேயே பெயரை 'ஸ்பாட் லைட்' போட்டுக் காட்டி விட்டோம். திருப்திதானே? - ஆர்.)

● பலராம் செந்தில்நாதன்,
கவுண்டம்பாளையம்.

*? ஐந்து ரூபாய் பிக்பாக்கெட் அடித்தால் துவைத்து விடுகிறோம். ஆனால் கோடிக் கணக்கில் சுருட்டினால் சம்மன் அனுப்பிக் கொண்டிருக்கிறோமே...?*

! அதிகாரம் படைத்தவர்களிடம் அஞ்சுவது மட்டுமல்ல... பலவீனர்களை வதைப்பதும் மனிதனின் பலவீனம்தான்.

● எஸ். பாலமுருகன், பரமக்குடி.

*? பாரத கலாசாரமும் தமிழ்க் கலாசாரமும் அடிப்படையில் முரண்பாடு கொண்டவையா?*

பெரிய வழிகாட்டல்!



• நெருக்கடி...?



• சின்ன தியாகம்!

! நம் நாட்டில் கலாசார வேறுபாடுகள்தான் உண்டேயொழிய கலாசார முரண்பாடுகள் கிடையாது. இந்த வேறுபாடுகளிடையே ஒற்றுமை காண்பதுதான் நமது தனித்தன்மை மிக்க பாரத கலாசாரம். ஆனால் வேறுபாடுகளையே சுயநலத்துக்காகச் சிலர் முரண்பாடுகளாக்கி, அரசியல் பண்ணுவதால்தான் விரிசல்கள் ஏற்படுகின்றன.

● என். ஜெயராமச்சந்திரன், கோவில்பட்டி.

*? 'தமிழன் தொலைக்காட்சிப் பெட்டிக்குள் குடும்பம் நடத்தத் தொடங்கிவிட்டான்' என்று வைரமுத்து கூறியுள்ளாரே?*

! அவனுடைய குடும்பமே தொலைக்காட்சிப் பெட்டிதான் என்ற நிலை உருவாகிவிட்டது.

● மு. இரவிச்சந்திரன், சேலம் - 9.

*? 'பீஷ்மராகவிருந்து வழிகாட்டுங்கள்' என நெடுஞ்செழியனை 'ஜெ' கேட்டுக் கொண்டிருக்கிறாரே...?*

! யாருக்கு...? துரியோதனாதிகளுக்குத்தானே வழிகாட்ட வேண்டும்...?



• உலகிலேயே...

● வடவள்ளி ராமசுப்ரமணியன், கோவை.

*? வாழப்பாடி ராமமூர்த்தி இதுவரை உருப்படியாக ஏதும் செய்திருக்கிறாரா...?*

! இப்படியொரு கேள்வி கேட்கிற அளவுக்குத் தமது பெயரைத் தொடர்ந்து செய்திகளில் வைத்திருக்கிறாரே, போதாதா?

● கே.எம். கவிட்முருகன்,
கரடிகொல்லப்பட்டி.

*? இந்தியனில் தங்கள் இதயத்தைத் தொட்டவர் கமலா? ஷங்கரா? ரகுமானா?*

! பெயர் மறந்துவிட்ட அந்த ஐரோப்பியர். படத்தில் அந்த மேக்-அப் மட்டும் இல்லாவிட்டால் வேறு என்ன விசேஷம்!

● எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

*? உலகில் சசிகலா மட்டும்தான் நகை அணிகிறாரா? என்று கேட்கிறாரே ஜெ?*

! உலகே வியக்கிறபடி நகை அணிந்தவர் உலகிலேயே அவர் ஒருவர்தான்!

## ராவுக்கு ஏற்பட்டுள்ள நெருக்கடி பற்றி...?

● ஆர்.கே.எஸ். ஷம்ஸ"கனி, டி. மாரியூர்.

*? 'என் தியாகம் ரொம்பச் சின்னது; இந்த வயதிலும் இப்படிப்பட்ட தியாகம் செய்யக் கூடிய வாய்ப்பு ஏற்பட்டதே!' என்று எஸ்.டி.எஸ். பெருமையுடன் கூறியுள்ளாரே?*

! இது தியாகமெனில் விரப்பனுக்குக் கண்ணை மூடிக்கொண்டு பொது மன்னிப்பு வழங்கி விடலாம்!

● மல்லிகை மன்னன், மதுரை - 14.

*? 'தங்களது கட்சியின் சின்னமான சைக்கிளை மக்கள் மறந்துவிடக்கூடாது என்பதற்காகத்தான் பெட்ரோல், டீசல் விலையை சிதம்பரம் உயர்த்தியிருக்கிறார்' என்று கேலி செய்துள்ளாரே குமரியார்?*

! கிண்டல்தான் என்றாலும் நயமான கிண்டல்!

● இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

*? நரசிம்மராவுக்கு ஏற்பட்டுள்ள நெருக்கடி நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது என்பது உண்மையா...?*

! 'நெருக்கடியா? அப்படின்னா...?' என்று கேட்கும் நிலையில் அல்லவா இருக்கிறார் அவர்! தமக்கு விடுக்கப்பட்டுள்ள சம்மனை எதிர்த்துத் தடைபெற மனு செய்திருக்கிறார். தலைமையிலிருந்து விலக மறுத்து தற்காலிகமாய் வெற்றியும் கண்டிருக்கிறார். அவர் விலக வேண்டியிருக்கும் என்று துணிவுடன் வெளிப்படையாய்ச் சொன்னார் அமைச்சர் இந்திரஜித் குப்தா. 'உட்கட்சி விவகாரத்தில் எப்படித் தலையிடலாம்?' என்று அவரையும் பிரதமர்

உள்பட அத்தனை பேரும் தலையில் தட்டி மன்னிப்புக் கேட்க வைத்து விட்டார்கள்! ராவின் கைதான் இப்போதைக்கு ஓங்கியிருக் கிறது!

● **வி.பி. மரகதவள்ளி, மதுரை.**

*? ரஜினி பொதுவாழ்வுக்கு வர வேண்டும் என்று மூப்பனார் வேண்டுகோள் விடுத்துள் ளது பற்றி...?*

! இப்போதே பொது வாழ்வில்தானே இருக் கிறார்? 'அரசியலில் நாட்டம் இல்லை' என்றும் கூறிவிட்டார். சரியான முடிவு.

● **ஏ.எம். சோனத்தன், பாகாலா.**

*? டி.என். சேஷனுக்கு மாக்சசாய் விருது கிடைத்துள்ளது தமிழகத்துக்கே பெருமை அல்லவா?*

! அதைப் பெறும் முதல் தமிழர் அல்ல அவர் என்றாலும் பெருமை தான். வாழ்த்துவோம். எம்.எஸ். சுப்புலட்சுமி, டாக்டர்.எம்.எஸ். சுவாமிநாதன், டி.என். சேஷன்– என அந்த விருது பெற்ற மூன்று தமிழர் களும் 'எஸ்' எழுத்துக்காரர்கள் என் பது ஓர் அதிசய ஒற்றுமை!

● **ஆர்.ராஜதுரை, சீர்காழி -10.**

*? பெண்கள் லஞ்சம் வாங்குகிறார் கள், ஊழல் புரிகிறார்கள், கள்ளச் சாராயம் விற்கிறார்கள்; இவை அனைத்தும் ஆண்களுக்குப் பெண்களும் சரிநிகர் சமானமானதைத் தானே காட்டுகிறது? இதுதான் வளர்ச்சியா?*

!இல்லை, இது ஆண்களுக்கு நிகரான வீழ்ச்சி. வளர்ச்சி...? ஒரு துறை பாக்கியில்லாமல் அத் தனையிலும் காணக் கிடைக்கிறது. பார்க்கத் தான் ஆரோக்கியமான கண்கள் வேண்டும்.

● **ஜெ. ஜெயசக்திவேல், நெற்குப்பை.**

*? இங்கிலாந்தில் இந்திய அணி கற்றுக் கொண்ட பாடம் என்ன...?*

! தோல்வியைக் கண்டு துவளாமல் அதிலிருந்து பாடம் கற்றுக் கொள்வதுதான் நல்லது. அந்த வகையில் பம்பாய் விமான நிலையத்தில் சந்தீப் பட்டேல் கொடுத்திருக்கும் பேட்டியின் ஒவ் வொரு அம்சமும் சிறப்பான கவனத்துக்குரி யது. (அஸார் தலைமை விஷயத்தில் மட்டும் நழுவல்!) தவிர, அடுத்த பந்தயத் தொடரில் எதிரணி யார்? அவர்களின் பலம், பலவீனம் என்ன, என்று தெரிந்து வைத்துக் கொண்டு அதற்கேற்ப நம் அணியைத் தயார் செய்யலாம். இதற்கு வீடியோ போன்ற நவீன சாதனங்களும் உதவும்.



• இதயம் தொட்டது...?



• கிண்டல் நயம்!



• ஏர்போர்ட் அறிவுரை

● **செ.ரா.ரவி, ஒட்டன்சத்திரம்.** ❑

*? கலைஞர் ஆட்சியில் இல்லாமல், இதே ஐந்து டி.எம்.சி. தண்ணீர் மட்டுமே கர்நாட கம் வழங்கியிருந்தால் இதே கலைஞர் என்ன குதி குதித்திருப்பார்...?*

! ஆகா, எதிர்க்கட்சித் தலைவருக்கு பொறுப்பு கள் குறைவு. அந்த சுதந்தரமே அலாதி தான். அம்மாவைப் பாருங்க- இதே விஷயத்திலே இப்ப என்ன பாடுபடுத்தறாங்க!

● **எஸ். பழநி, சென்னை - 15.**

*? காய்கறிகளின் விலை உயர்வைக் கண்ட னம் செய்து பேசியுள்ளாரே ஜெ?*

! முதல்வர் பதவி பறி போன பிறகுதான் விலைவாசி உயர்வு உறைக்கிறதாக்கும்!



• 'எஸ்' வரிசையில்...

❑ ரூ. 25 பரிசு பெறுபவர்:
செ.இரா. ரவி.
132, த.பி.பி. நகர்,
ஒட்டன்சத்திரம்
அண்ணா மாவட்டம் - 624 619.

'சினிமா' என்கிற சாதனத்துக்கு இந்த வருடத்தோடு நூறு வயசு ஆகிவிட்டது. உலக அளவில் எத்தனையோ சாதனைகளை, சாதனையாளர்களை அடையாளம் காட்டியிருக்கிறது சினிமா. ஆனால் நம் ஊரில் சினிமா சாதித்தது என்ன? நூற்றாண்டு கண்ட சினிமாத்துறையில், நூறு படங்களுக்குமேல் பணியாற்றிய சில கலைஞர்களிடம் இதனைக் கேட்டோம்.



• எம்.எஸ்.விஸ்வநாதன் படம் : யோகா

# சினிமாவுக்கு 100 வயது: என்ன

**எம்.எஸ். விஸ்வநாதன் (இசை யமைப்பாளர் - 1000 படங்களுக்கு மேல்!) :**

"சாதனை என்று எதைச் சொல்வது? தொழில் நுட்பம் வளர்ந்து விட்டதையா? கம்ப்யூட்டர்கள் கோலோச்சத் தொடங்கி விட்டதையா? மேலை நாடுகளில் இதெல்லாம் ஏற்கெனவே வந்து விட்டவைதானே? இன்றைய சினிமாவின் வளர்ச்சியில் எனக்கு ஒருவித அபாயம்



• ராதிகா

கலந்திருப்பதாகவே தெரிகிறது. நமது பண்பாடு என்கிற அம்சமே இல்லாத ஒரு மேலைக் கலாசாரத்தைத்தான் புகுத்திக் கொண்டிருக்கிறார்கள். 'இங்கிலீஷ் படம் மாதிரி எடுக்கிறேன்' என்கிறார்கள். அதான் இங்கிலீஷ் படங்கள் வருகின்றனவே! அவர்கள் மாதிரி நாம் ஏன் எடுக்கவேண்டும்? நம் தனித்துவம் என்ன ஆயிற்று? உண்மையைச் சொல்கிறேன். இன்று கண்ணுக்கு விருந்தளிக்கிறார்களே தவிர கருத்துக்கு விருந்தளிக்க யாரும் தயாரில்லை! சினிமா இசையையே எடுத்துக் கொள்ளுங்கள்... ஒருவித விவேகம் இல்லாத வேகம்தான் இன்று இருக்கிறது. இயக்குநர்கள் என்று பார்த்தால், ஸ்ரீதர், பாலசந்தர், கிருஷ்ணன்-பஞ்சு... இவர்களிடமெல்லாம் இருந்த 'depth' இன்று யாரிடம் இருக்கிறது? 'நேரம் இல்லை' என்றும் 'மக்களின் ரசனை மாறிவிட்டது' என்றும் சமயத்துக்கேற்பக் காரணம் சொல்கிறார்கள். மக்களுக்கு என்றும் ஒரே ரசனைதான். நல்ல ரசனைதான். எனக்கு யாரையும் குறை சொல்லும் எண்ணம் இல்லை. ஆனால் வசதி வரவர, நம் சினிமாக்காரர்களுக்குக் கூடவே அசதி வந்து விடுகிறது! எதையும், எப்படியும் செய்யலாம் என்கிற எண்ணம் வந்துவிட்டால் அப்புறம் நம் பண்பாடு, நம் கலாசாரம்

என்பதெல்லாம் காணாமல் போக வேண்டியது தானே? ஒன்று சொல்கிறேன். அந்தக் காலத்தில் கலைஞர்களுக்கு உழைக்கத் தெரிந்திருந்தது. பிழைக்கத் தெரியவில்லை. இன்று எல்லோருக்கும் பிழைக்கத் தெரிந்திருக்கிறது.... யோசித்துப் பார்த்தால் ஒரு நல்ல கலைஞன், வியாபாரியாக இருக்க முடியாது. வியாபார சிந்தனை உள்ளவர்களுக்குக் கலை சாத்தியமில்லை! எத்தனையோ தொழில் நுட்பம் வளர்ந்திருந்தும் நல்ல கலைப் படைப்பு நம்மிடையே அதிகம் உருவாகாததன் காரணம் இதுதான்!

**பிலிம் நியூஸ் ஆனந்தன் (திரைப்பட மக்கள் தொடர்பாளர் - 1000 படங்களுக்கு மேல்) :**

"இங்கே சினிமாவின் மிகப் பெரிய சாதனை - அது நிறையப் பேருக்கு வாழ்வு கொடுத்திருக்கிறது என்பதுதான்! மிக அதிகமாகப் பணம் புழங்கும் தொழில் இது. வெளியாகிற நூறு படங்களில், இருபத்தைந்து படங்கள் நிச்சயம் வெற்றி பெறுகின்றன. 'நூறாவது நாள்' என்று போஸ்டர் ஒட்டினால்தான் வெற்றி என்பதல்ல... ஐம்பது நாட்கள் ஓடினாலே வெற்றிதான்! இதனால் (வெளியே சொல்வதில்லை என்றாலும்) தயாரிப்பாளர்கள் சுபிட்சமாக இருக்கிறார்கள். 'இது ஒரு சாதனையா' என்று கேட்டால் ஆமாம் என்றுதான் சொல்வேன். ஏனெனில், பத்து வருடங்களுக்கு முன்பெல்லாம்

# சாதித்தோம்?

தென்னிந்தியப் படங்களுக்கு வட நாட்டிலும் வெளி நாடுகளிலும் பெரிய வரவேற்பு ஒன்றும் இல்லை. இன்று நிலைமை மாறிவிட்டது. ரகுமான், மணிரத்னம், பாலசந்தர், பாரதிராஜா, ஷங்கர் போன்ற பெயர்களுக்குக் கடல் கடந்த நாடுகளிலும் ஏராள வரவேற்பு! இங்கு ரிலீஸாகிற ஒரு படம் - அதே நேரத்தில் துபாயிலும் லண்டனிலும் நியூயார்க்கிலும் ரிலீஸாகிறது! இப்படி வெளிநாடுகளில் ரிலீஸ் ஆகிற நம் படங்கள், இங்கே இருப்பதை விட நல்ல வசூல் செய்கின்றன. உலக அளவில் நம் கலைஞர்கள் இன்று பேசப்படுவது பெரிய சாதனை அல்லவா?

**ராதிகா :**

"ஒரு காலத்தில் தயாரிப்பாளரைக் கண்டால் ஹீரோ கைகட்டி நிற்பார். அதன் பின் மரியாதை நிமித்தம் எழுந்து நிற்பார். பிறகு நேருக்கு நேர் உட்கார ஆரம்பித்தார்கள். அப்புறம் ஹீரோ, புரொட்யூசர் முன் சிகரெட் பிடிக்க ஆரம்பித்தார். கடைசியில் ஹீரோ முன் தயாரிப்பாளர் கைகட்டி நிற்க வேண்டியதாகி விட்டது! இதுதான் சினிமாவின் மாபெரும் சாதனை."

—இது என் அப்பா (எம்.ஆர். ராதா) சொன்னது. இன்றைய கால்கட்டத்துக்கும் மிகப் பொருத்தமாகவே இருக்கிறது என்பதுதான் ஆச்சர்யம்.

நடிக - நடிகையர், அழகுடன் மட்டுமின்றி பல திறமைகள் மிக்கவராக இருக்கவேண்டும் என்கிற இலக்கணமெல்லாம் இன்று மாறிவிட்டது. அழகே கூட அவசியமில்லை என்கிற நிலை வந்து விட்டது. நான் முதல் முதலாக நடிக்கத் தொடங்கியபோது "உன் மாதிரி மூஞ்சியையெல்லாம் அந்தக்காலமா இருந்தா குரூப் டான்ஸுக்குக் கூட எடுத்துக்க மாட்டாங்க" என்று சொன்னார் என் அப்பா.

'நடிப்பு' விஷயத்திலும் அபார மாற்றம்.



• ஆனந்தன்



• புலியூர் சரோஜா



• ஆர். செல்வராஜ்

சிவாஜி போல அர்ப்பணிப்பு உணர்வுள்ள நடிகர்களை இப்போது எங்கே பார்க்க முடிகிறது? திரையுலகில் நீடித்து இருக்க வேண்டும் என்கிற எண்ணம் இன்று யாருக்கும் இல்லை. இருக்கிற காலத்தில் நிறைய பெயர், பணம் சம்பாதித்துக் கொண்டு விட வேண்டும் என்கிற ஓரே எண்ணம்தான் எல்லாருக்கும். இது வளர்ச்சியா... சாதனையா.... வேதனையா... தெரியவில்லை!

### ஆர். செல்வராஜ் (திரைக்கதாசிரியர்.)

"சினிமாவுக்கு அடிப்படையான விஷயம் கதைதான என்று ஒரு காலத்தில் சொல்வார்கள். இன்று அந்த இடத்தைத் திரைக்கதை பிடித்து விட்டது.

'கதை நல்லா இருக்கு... படம்தான் சொதப்பல்' என்றும், 'படத்துல கதையே இல்லைய்யா. ஆனா சூப்பரா இருக்கு!' என்றும் ரசிகன் பேசுகிறானென்றால், பேச வைப்பது திரைக்கதை!

தமிழ்த் திரையுலகைப் பொறுத்தவரை, இந்த திரைக்கதை விஷயத்தில் திருப்பம் ஏற்படுத்தியவர் இயக்குநர் ஸ்ரீதர். பிறகு பாலசந்தரும் (உணர்ச்சி வெளிப்பாடு) பாரதிராஜாவும் (மண் வாசனை) பாலு மகேந்திராவும் (எளிமை) மணி ரத்னமும் (விஷுவல் எஃபெக்ட்) ஷங்கரும் (பிரும்மாண்டம்) தத்தம் பாணியில் திரைக்கதை அமைப்பில் கொடி நாட்டி வருகிறார்கள்.

ஒரு காலத்தில் நம்மை ஏளனமாகப் பார்த்த பம்பாய்ப் பட உலகம் இன்று நம்மைப் பார்த்துப் பார்த்து வியக்கிறதென்றால் நமது திரைக்கதை நேர்த்தியும் சொல்லப்படுகிற விதமும்தான் காரணம். அந்த வகையில், நிறையவே நாம் சாதித்திருப்பதாகப்படுகிறது.

### புலியூர் சரோஜா (நடன இயக்குனர்) :

சினிமாவின் பல்வேறு உட்பிரிவுத் துறைகளில் ஏற்பட்டிருக்கும் நினைத்துப் பார்க்க முடியாத மாற்றங்களைத்தான் 'சாதனை' என்று சொல்ல வேண்டும்!

அன்றைக்கு, 'பாலும் பழமும்', 'பாவ மன்னிப்பு' போல மிக அழுத்தமான கதையுள்ள படங்கள் மட்டுமே வந்து, வென்றன! இன்று நிலைமை தலைகீழ்! ஒருபடம் எதனால் ஓடுகிறது என்று எடுத்தவர்களே புரியாமல் தவிக்கிற நிலைமை - எப்படிப்பட்ட சாதனை!

நடனத்தையே எடுத்துக் கொள்வோம். அன்றைக்குக் கவர்ச்சி நடன நடிகைகள் என்று தனியாகச் சிலர் உண்டு. இன்று ஹீரோயின்களே அந்தப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டு விடுகிறார்கள்.

சற்று விரசமான 'அசைவு' கொடுத்ததற்காக ஒருகாலத்தில் என்னை 'இவ என்ன பொம்பளையா?' என்று என் காதுபடவே திட்டியிருக்கிறார்கள்.

ஆனால் இன்று? எம்டிவியும் விடிவியும் தான் எதையும் நிர்ணயிக்கிற விஷயங்கள் இங்கே. காலம், டிரெண்ட் எல்லாம் மாறி விட்டது. இதில் எதைச் சாதனை என்பது

தொகுப்பு : **கிச்சா, மௌலி, துளசி**

---



"என் கணவருக்கு நாட்டுப்பற்று அதிகம்டீ!"

"எப்படிச் சொல்றே?"

"மூகத்துல எண்ணெய் வடியிதுன்னு சொன்னதும் உடனே O.N.G.C. க்கு ஃபோன் பண்றாரே!"

— சீர்காழி வி. ரேவதி



காலையில் நடன ரிகர்ஸல். பகல் முழுக்க அலுவலகப் பணி. மாலை மறுபடியும் நடனம். தவிர, நாட்டிய நாடகங்களுக்கான ஆராய்ச்சி. மிகவும் பிஸியாக இருக்கிற அனிதா ரத்னத்தை டெலிபோனில் பிடித்து, "வாழ்த்துக்கள். இந்த வருடம் நிருத்திய சூடாமணி விருது பெற்றிருப்பதற்காக!" என்ற போது ஆச்சர்யப்பட்டார்.

"அட, ஹிந்துவில் சின்னதாக வந்திருந்த செய்தி உங்கள் கண்ணில் பட்டுவிட்டதா?" என்றார்.

அனிதாவின் ஒரு முகம் நடனக் கலைஞராக அவரை அடையாளம் காட்டும். இன்னொரு முகம், சுந்தரம் இன்டஸ்ட்ரீஸின் விளம்பர – மார்க்கெட்டிங் பிரிவில் கன்ஸல்டன்ட்டாக உட்கார்ந்திருக்கும். மூன்றாவதாகவும் ஒரு முகம் உண்டு. அது அமெரிக்க மக்களுக்கு வெகு பரிச்சயம். அமெரிக்கத் தொலைக்காட்சியில் மிகப் பிரபலமான நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர், பேட்டியாளர் – நம் ஊர் பிரணாய்ராய் போல.

அரசியல், கலை, இலக்கியப் பிரமுகர்களை இவர் பேட்டி கண்டு, தம் இசகுபிசகான கேள்விகளால் பரிதவிக்க வைக்கிற சாமர்த்தியத்தை அமெரிக்கர்கள் மிக ரசிக்கிறார்கள். கடத்தல் புகழ் கஷோகியின் பல அடுக்கு மாளிகையில் நம் சந்திராசாமியை பேட்டி கண்டு பரபரப்பு ஏற்படுத்தியவர்.

எதிராஜ் கல்லூரியில் ஆங்கில இலக்கியம் முடித்தவர். கலாக்ஷேத்ராவில் நடனம் பயின்று நாட்டிய முயற்சிகளில் சாதித்து வருவது வியப்பில்லை. டீவியில் எப்படி?

"நியூ ஆர்லியன்ஸில் ஒளிபரப்புத் துறையில் எம்.ஏ. வாங்கினேன் தெரியுமா?" என்று கேட்டார்.

முன்னதாக நியூயார்க் பல்கலைக் கழகத்தில் 'உலக நடன வகைகள்' என்கிற தலைப்பில் பிஎச்டிக்கும் விண்ணப்பித்து வைத்திருக்கிறார் அனிதா.

"ஆனால் பாதியில் விட்டு விட்டேன். டீவி என்னை விழுங்கி விட்டது!" என்கிறார்.

நடனம் சரி, டீவி சரி. சுந்தரம் இன்டஸ்ட்ரீஸில் என்ன பணி இவருக்கு?

"வீடியோ நியூஸ் மாகஸீன் தயார் பண்ணுவது என் பணி. கம்பெனியின் குறிக்கோள், சாதனை, மோடிவேஷன் பற்றியெல்லாம் வீடியோ படம் எடுத்து, எல்லாக் கிளைகளுக்கும் அனுப்பி வைக்க வேண்டும்."



# நடனம் ஆடுபவர்களுக்கு அழகு முக்கியமா?

இது தவிர, தனிப்பட்ட முறையிலும் வெளி நிறுவனங்களுக்கு வீடியோ விளம்பரங்கள் தயாரித்துத் தருகிறார் அனிதா. ஸ்டெர்லிங் ஹாலிடே ரிஸார்ட்டுக்கும் – தூர்தர்ஷனுக்கும் கூட!

"இப்போது, தென்னிந்திய உணவு வகைகள் பற்றி அமெரிக்க டீவிக்கு ஒரு அறிமுகப் படம் எடுத்துக் கொண்டிருக்கிறேன்" என்கிறார்.

இதில் வரும் வருமானமெல்லாம்?

அனிதா, 'அரங்கம்' என்றொரு டிரஸ்ட் வைத்திருக்கிறார். நாட்டியங்களில் நூதன முயற்சிகளை மேற்கொண்டு, அறிமுகப்படுத்தி வெற்றி காணச் செய்வது இந்த டிரஸ்டின் தலையாய பணி. மேற்சொன்ன வருமானமெல்லாம் இந்த டிரஸ்டுக்குப் போய் விடுவதாகச் சொன்னார் அனிதா.

ஆழ்ந்த நாட்டிய ஈடுபாடு இருப்பினும் டீவியின் ஆக்கிரமிப்பில் நடன, நாடகக் கலையெல்லாம் எத்தனை தூரம் பாதிக்கப்படுகிறது என்பதைத் துல்லியமாக உணர்ந்திருக்கிறார் அனிதா.

"கையில் ஒரு ரிமோட் கன்ட்ரோலை வைத்துக் கொண்டு இன்று உலகத்தையே சுற்றி வந்து விடலாம். நடனத்தையெல்லாம் யார் இன்று உட்கார்ந்து மூன்று, மூன்றரை மணி நேரம்

பார்க்கிறார்கள்? இரவு எட்டு, எட்டரை ஆனால், ஆட்டோ பிடித்து வீடு போவதில்தான் மனம் இருக்கிறது. ஒரு மணி, ஒன்றரை மணியில் புத்தி சாலித்தனமாக நிகழ்ச்சிகளை அமைத்துக் கொள்வதுதான் நல்லது'' என்று யதார்த்த மாகப் பேசுகிறார்.

அனிதா, நடன நிகழ்ச் சிகளோடு மட்டும் நிறுத்திக் கொள்ளவில்லை. 'நர்த்தகி' என்று ஒரு நடன டயரக்டரி வெளியிட்டிருக்கிறார். நடனக் கலைஞர்கள் பற்றிய விவரங் கள், இசை அமைப்புகள் பற்றிய விவரங்களோடு அப் படியொரு டைரக்டரி போடும் யோசனை எப்படி வந்தது?

''1991-ல் அமெரிக்காவில் இருந்தபோது, ஒரு மூவி கம்பெனி, என்னிடம் தில்லி யில் இருக்கிற ஒரு டான் ஸரின் போன் நம்பரைக் கேட் டது. நான், இந்தியத் தூதரகம் மூலம் விசாரித்தும் பய னில்லை. பலவாறாக முயன்றும் அந்தக் கலைஞரைப் பிடிக்க முடியவில்லை. மிகச் சிரமப்பட்டு ஒருவழியாகப் பிடித்தேன் என்பது ஒருபுறம் இருக்கட்டும். இந்தச் சம்பவம்தான் அப்படி யொரு முழு விவரங்கள் அடங்கிய 'நடனக் கலைஞர்கள் கையேடு' வெளியிட எனக்குத் தூண்டுதலாக அமைந்தது. சென்னைக்கு வந்து, சுதாராணி ரகுபதியிடம் பேசிக் கொண் டிருந்தபோது, இப்படியொரு எண்ணம் இருப்பதை வெளிப்படுத் தினேன். அவரும் உற்சாகப்படுத்த, 'நர்த்தகி' பிறந்தது!''

அனிதாவின் நாட்டிய முயற்சிகள், பாரம்பரியத்திலிருந்து விலகாது, அதே நேரத்தில் நூதனம் நிறைந்ததாகவும் இருக்கும். நடனத்தில் சமூகப் பிரச்னையுடன் கூடிய கருத்துக்கள் இடம் பெறுவதில் ஆர்வம் காட்டுகிறார்.

''லஞ்ச-ஊழல்' குழந்தைத் தொழிலாளர் பிரச்னை போன்றவற்றைக் கூட நாட்டியத்தில் கொண்டு வரலாம்தான். ஆனால் அவைகளுக்கு 'நாடகம்' இன்னும் பலமான மீடியமாக இருக்கும்!'' என்கிறார்.

சினிமா நடனம் பற்றிய அனிதாவின் கருத்தும் மாறு பட்டதாயிருக்கிறது. சினிமா நடனங்கள் அத்தனை எளிதான தல்ல என்கிறார்.

''பிரபு தேவாவின் சில வகை நடனங்கள் மிக சிரமமானவை. ஆனால் வெரைட்டி இல்லாததால்தான் அவரது நடனங்கள் சலிப்பூட்டத் தொடங்கி விட்டன. கமலைப் பாருங்கள். நிலைத் திருக்கிறார் என்றால், படத்துக்குப் படம் ஸ்டைல் மாற்றம் தான் காரணம்!'' என்கிறார்.

நடனம் ஆடுபவர்களுக்கு அழகு அவசியம் என்பது அனி தாவின் கருத்து. ''விஷுவல் மீடியா என்று சொன்னால், பார்ப்பவருக்கு அது ஆர்வத் தைத் தூண்டும் வகையில் அமைய வேண்டியதுதானே முறை?'' என்று கேட்கிறார்.

''கலைஞர்கள் உடம் பைக் கொஞ்சம் டிரிம்மாக வைத்துக் கொள்ள வேண் டும். நான் கூட அமெரிக்கா போகிறபோதெல்லாம் மாடர்ன் டான்ஸ், ஜாஸ் டான்ஸிங் செய்வதுண்டு - எல்லா தசைகளுக்கும் வேலை கொடுப்பதற் காக!'' என்கிறார்.

கலைஞர்களின் திருமண வாழ்க்கை, அவர்களது 'கிரியேட் டிவிடி'யை பாதிக்கிற பட்சத்தில், தனியே ஒதுங்கி விடுவது தான் நல்லது என் பது அனிதாவின் எண்ணம்.

- சாருகேசி

• அனிதா



# கல்கி

அடுத்த இதழில்....

● வாரம் ஒரு மெகா போட்டி! பரிசு ரூ. 5000/-

# 10

புதிய பகுதிகள் ஆரம்பம்!

● உள்ளே வரலாமா?

– சுண்டி இழுக்கும் தொடர்கதை

● மனசுல இருந்தது; கொட்டிட்டேன்!

– நெஞ்சம் திறக்கும் பிரமுகர்கள்






- **வித்தகர்!**

  - பழைய முகங்களின் புதிய பரிமாணம்!





- **எறும்பார் கடிக்கிறார்!**

- **களத்தில் கல்கி!**

  – சமூகப் பிரச்னைகளை நோக்கி...



- **செய்திகள் வாசிப்பது செம்பியன்...**

- **ஹலோ, சுகமா?**

  – உங்கள் ஆரோக்கியத்துக்காக ஒரு பக்கம்!





- **கடலோரக் கொலைகள்**

  பெனிட்டோ குமார் எழுதும் பரபரப்பான மர்ம(பட)க்கதை!

ஒரு ஜன நெரிசலான நேரத்தில் தவிர்க்க முடியாமல் ராம்குமார் தனது மோட்டார் சைக்கிளில் கீழே காலை ஊன்றிய போதுதான் அந்தச் சுவரொட்டியைப் பார்க்க நேர்ந்தது.

## நவீன சுயம்வரம்

.... மஹா ஜனங்களுக்கு (இந்தியா மத, ஜாதி சார்பற்ற நாடு என்பதால் கோடிட்ட இடத்தில் குறிப்பிட்ட ஜாதி பெயரைத் தவிர்த்திருக்கிறேன்)

நமது சமூகத்தின் முன்னேற்றம் குறித்தும், உறுதிப்பாட்டினை காக்கும் பொருட்டும், நமது சமூக இளைஞர்களை நல்வழிப்படுத்தவும், முன்னாள் சேர்மன் அமரர் நடராஜ... நினைவு மகாலில் நவீன சுயம்வரம் நடைபெறும். வரன்களும், பெண்களும் ரூ. 100/- முன் பணமாகச் செலுத்தி வரும் ஜனவரி 19 ம் தேதி சுயம்வரத்தில் கலந்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள். விவரங்களுக்கு நமது சமூகக் கட்டடத்தை அணுகவும்.

இவண்

வெங்கடேச.... (தலைவர்)

ராஜகோபால.... (செயலாளர்)

பின்குறிப்பு : முன் பதிவு செய்து கொள்ள வருபவர்கள் அவசியம் ஜாதி உறுப்பினர் அட்டையை எடுத்து வரவும்.

# நவீன சுயம்வரம்

ராம்குமார், தனது சொந்த ஜாதியைச் சேர்ந்த, கிட்டத்தட்ட தன் அளவு சம்பாதிக்கும் ஒரு வங்கியில் எழுத்தர் வேலை பார்க்கும் விஜி என்ற விஜயராணியைக் காதலிக்கிறான்.

அவன் சேமிப்புக் கணக்கு ஆரம்பிக்கச் சென்றபோது, அந்தக் கவுண்டரில் விஜி இருந்தாள். ரெக்கரிங் டெபாஸிட்டின் பெயரில் கடன் வாங்கப் போனால் அந்த கவுண்டரில் விஜி இருந்தாள். வித்ட்ராயல் போட்டு பணம் வாங்கப் போனால் கேஷ்-கவுண்டரில் விஜி இருந்தாள். எல்லாம் வெவ்வேறு தினங்களில் நிகழ்ந்தவை.

"ஆல் இன் ஆலா?" என்றான்.

"லீவ் ரிஸர்வ்" என்றாள்.

"கேஷுவல் லேபரர் இல்லியே?"

அவள் கல, கல என்று சிரித்தாள். அவள் கொட்டிய முத்துக்களை அள்ளிக் கொள்ள அவன் பர்ஸில் இடமில்லை. வித்ட்ரா பண்ணியிருந்த பணம் நிரம்பி வழிந்தது. வெள்ளோட்டமாக அவன் சிரித்த சிரிப்புக்கு நல்ல பலன் இருந்தது. வங்கிப் பின்னணியை மீறி திரை அரங்கு, டிபார்ட்மெண்டல் ஸ்டோர், சுகவனேசுவரர் சந்நிதியில் ஆருத்ரா தரிசனம் — அவள் பக்தி நோக்குடனும், அவன் ஸைட் அடிக்கும் நோக்குடனும் என்பது வேறு விஷயம் — என மாறுபட்ட பின்னணியில் அவர்கள் பரிச்சயம் மலர்ந்து வழக்கம் போல காதலனான அவனையே 'ஐலவ்யூ' சொல்லச் சொன்னது.

அதன் பிறகு, குறைந்தது இரண்டு வருடமாவது அவர்கள் காதலித்திருப்பார்கள். ராம்குமார் விஜிக்கு குறைந்தது நான்கு புடைவை, குடை, ஒரு ஸெண்ட் பாட்டில், பாரதியார் கவிதை புஸ்தகம் - காதலினால் மானுடர்க்கு கவலை போம் என்ற வரிகள் பச்சைமசியால் அடிக்கோடு இடப்பட்டிருந்தது - தோலினால் செய்யப்பட்ட தோள்பை முதலியவைகளை வாங்கிக் கொடுத்தான். அவள் பிரதி காதலாக ஒளிக்கேற்றவாறு நிறம் மாறும் கூலிங் க்ளாஸ், தோல் கையுறை, ஆயத்த சட்டை நான்கு என வாங்கிக் கொடுத்தாள்.

ராம்குமார் அவர்கள் வீட்டில் தன் காதலை இந்த நேரம் வரையில் பிரஸ்தாபிக்கவில்லை. வெறும் மெடிக்கல் ஸேல்ஸ் ரெபரஸன்டேடிவாக இருக்கும் அவன், பதவி உயர்வு பெற்று ஏரியா ஸேல்ஸ் மானேஜர், டிவிஷனல் மேனஜராகட்டும் என அவன் தந்தை காத்திருக்கிறார். மூன்றாம் நிலை எழுத்தராகச் சேர்ந்து, ஸிவில் ஸர்வீஸ் ராங்கில் பதவி ஒய்வு பெற்ற நாணயமான அரசு ஊழியர் என்பதால் பதவியும், அந்தஸ்துமே தன் மகனின் வாழ்வை நிர்ணயிக்கும் என உறுதியாக நம்பினார். இத்தனைக்கும் ராம்குமார் அவருடைய மூத்தமகன்.

விஜி வீட்டில். நிலை வேறு. விஜியின் அப்பா குகைப் பகுதியில் சாயப்பட்டறை வைத்திருப்பவர். பல விதமான நிறங்களில் நூல்களுக்கு சாயமேற்றும் தொழில். சொந்தமாகக் காவல் நாயுடன் கூடிய வீடு. விஜியைத் தவிர வேறு வாரிசு கிடையாது. பெண் விருப்பமே பிரதானம். ஆனால் அவர் போட்டு வைத்திருக்கும் மாப்பிள்ளை லிஸ்டில், மாப்பிள்ளையாக வரப் போகிறவன் சேட்டு கடைகளில் பதினான்கு மணி நேரம் வேலை பார்க்கும் குமாஸ்தாவாக இருந்தாலும் இருக்கலாமே ஒழிய கண்டிப்பாக விற்பனைப் பிரதிநிதியாக இருக்கக் கூடாது.

விற்பனைப் பிரதிநிதிகள் என்றால் அவர் அகராதியில் குடிகாரர்கள். தொடர் புகை பிடிப்பாளர்கள்; பெண் பொறுக்கிகள், தீராத வயிற்றுப்புண்காரர்கள்.

எனவே விஜயராணியும் தனது காதலை வீட்டில் முன்மொழியவில்லை.

இப்படிப்பட்ட நிலையில் அவர்கள் காதல் பயிர் ஆதரவில்லாமல் வாடத் தொடங்கியிருந்த நேரத்தில்தான் ராம்குமார் மோட்டார் சைகிளில் பயணம் செய்தான். அப்பொழுதுதான் அந்த கவரொட்டி விளம்பரத்தைப் படித்துப் பரவசமானான்.

"ஒரு ஐடியா" என்றான் ராம்குமார்.

"என்ன?" என்றாள் விஜி ஐஸ்க்ரீமை அளைந்தபடி.

"இந்த சுயம்வரத்தில் நாம் இருவரும் கலந்து கொண்டால் என்ன?"

"இது என்ன ஸன் டிவி நடத்தும் பாட்டுக்குப் பாட்டு நிகழ்ச்சியா? அப்பா, சுயம்வரத்தில் கலந்துக்கவான்னு வாய் விட்டுக் கேட்க முடியுமா?"

"இதோ பார். நம் காதலை வாய்விட்டு இரு வீட்டிலும் சொல்ல முடியாத நிலை. இதை விட்டால் நமக்கு நல்ல சந்தர்ப்பம் கிடைக்காது. எப்படியாவது உன் வீட்டில் நீயும், என் வீட்டில் நானும் சந்தர்ப்பம் வாங்கி அறிமுகமில்லாதவர்கள் போல சுயம்வரத்தில் கலந்து கொள்வோம். முடிவில் பரஸ்பர விருப்பத்தைத் தெரிவிப்போம், என்ன?" என்றான்.

"பலிக்காமல் போனால்?"

"திருப்பியும் காதலிப்போம்!"

"போர்" என்றாள்.

ராம்குமார் இரண்டு நாள் வீட்டில் சந்தர்ப்பம் கிடைக்கும் பொழுதெல்லாம் நவீன சுயம்வரத்தைப் பற்றிப் பேசுவான். மூன்றாவது நாள் அவன் வீட்டில் எல்லா இடங்களிலும் பாத்ரூம் உள்பட தலைகுப்புற தேடிக் கொண்டிருந்ததை நிறுத்தி, எதைத் தேடுவதாக அவன் தந்தை கேட்க, ராம்குமார், சொன்ன பதில் "உறுப்பினர் கார்டு". நான்காவது நாள் அவன் தந்தையே சாதி சங்கத்தில் சென்று ராம்குமார் என்ற சிவதாணு... (சிவதாணு அவன் தாத்தா பெயர்) என்ற பெயரையும் ரூ. 100/- கட்டி, பதிந்து விட்டு வந்தார்.

விஜயராணிக்கு பழம் நழுவிப் பாலில் விழுந்தது. அவள் தாயாரே அவளது தந்தையிடம் சுயம்வரத்தில் கலந்து கொள்ள அனுமதி கேட்டாள். அவள் தந்தை கௌரவம், அந்தஸ்து என குதித்து, முடிவில் எப்பொழுதும் போல மனைவி சொல்வதற்குச் சம்மதித்தார்.

# சத்தியப்பிரியன்



சங்கத்தில் சுயம்வரத்தில் கலந்து கொள்ளும் வரன் மற்றும் பெண்களின் முழு விவரங்களையும் கேட்டார்கள். கலந்து கொள்ளும் அனைவருக்கும் அடையாள அட்டை வழங்கப்பட்டது. பெயர், வயது, உத்யோகம் முதலியன குறிப்பிடப்பட்டு ஓர் எண்ணும் வழங்கப்பட்டிருந்தது. நூற்றுக்கு மேல்தான் தொடங்கும் அந்த எண், அடையாள அட்டையில் பிரதானமாக இருக்க, போல்ட் டைப் வார்த்தைகளால் அச்சிட்டிருந்தார்கள். வயசு அதிகமான பெண், வயசு குறைவான பையனை தேர்ந்தெடுத்து விட்டால் என்ன செய்வது என்ற பயம் ராம்குமாருக்கு கவலையாக இருந்தது. ஆனால்



…அடுத்ததாக சோத்துப்பாக்கம் சுந்தரம் எழுதியுள்ள கடிதம்: "சனிக்கிழமைதோறும் ஒளிபரப்பாகும் 'சமையலோ சமையல்' நிகழ்ச்சிக்கு முன் 'தம்ப்ஸ்அப்' விளம்பரத்திற்கு போடுவது போல் எச்சரிக்கை அறிவிப்பைப் போட்டுத் தொலைக்கவும்… என் மனைவி நிகழ்ச்சியை சீரியஸாக எடுத்துக் கொண்டு செய்முறையில் இறங்குவதை என்னால் சகிக்க முடியவில்லை!"

— அகில்

கொலு மண்டபத்தில் அவன் பயம் தெளிவடைந்தது.

பெண்களின் வயதே குறைந்த அளவு கோலாக எடுத்துக் கொள்ளப்பட்டிருந்ததாம். ஒரே ஒரு பையனின் வயதும், பெண்ணின் வயதும் மட்டும்தான் ஒன்றாகப் போய் விட்டதாம். ஒரு குறிப்பிட்ட வரன் மீதோ, அல்லது பெண் மீதோ நிறைய மாலைகள் கரங்களில் காத்திருந்தால் மல்யுத்தம், ஏறு தழுவுதல் முதலிய தமிழர் பெருமை கூறும் வீர விளையாட்டுக்களை ஏவுவார்களா எனத் தெரியவில்லை. சுயம்வரத்துக்கும் வரதட்சணைக்கும் சம்பந்தமுண்டா, எல்லா வரன்களும் மண்டபத்தை விட்டு வெளியில் வரும் பொழுது கழுத்தில் மாலையுடன்தான் வர வேண்டுமா, போன்ற நிறைய சந்தேகங்கள் அவனுக்குக் கிளம்பிய வண்ணம் இருந்தன.

இவை எல்லாவற்றையும் தெளிவுபடுத்திக் கொள்ள முன்னதாகவே தனது வண்டியில் வழக்கமான எண்பது கிலோமீட்டர் வேகத்தில் போக எண்ணியிருந்தான். கடைசி நேரத்தில் ஆட்டோவில் அவனும், பெற்றோரும், கடைசி தம்பியும் கிளம்பிப் போனார்கள். ஆட்டோ டிரைவர் சீட்டை தம்பியும், டிரைவரும் பாதியாகப் பகிர்ந்து கொண்டார்கள்.

மண்டப வாசலில் அதிக அளவில் இரண்டு சக்கர மோட்டார் சைகிள்களும், ஒரு டாடா ஸியாரா, ஒரு மாருதி ஜென், இரண்டு அம்பாசிடர் கார்களும், நாலைந்து சைக்கிள்களும் நின்று கொண்டிருந்தன. இரண்டு இளம் நங்கைகள் பன்னீர் செம்பு, கல்கண்டு சகிதம் வரவேற்றார்கள். இருவரும் இந்த சுயம்வரம் சம்பந்தப்படாதவர்களாக இருக்க வேண்டும். பின்னால் விசாரித்ததில் மாருதி ஜென்னில் விஜயராணியும், அவள் குடும்பமும் வந்திருப்பது தெரிந்தது.

இவனது உறுப்பினர் கார்டை வாங்கி, பதிவு செய்து விட்டு இவனது அடையாள எண் தாங்கிய அட்டையை சட்டையின் நெஞ்சகப் பகுதியில் குத்தி விட்டார்கள். இவனை மட்டும் இரண்டு பிரிவாகப் பிரிக்கப்பட்டிருந்த கூடத்தின் ஒரு பகுதியில் போகச் சொன்னார்கள். இரண்டு நிமிடம் இவனை நடக்கச் சொல்லி, உட்காரச் சொல்லி, க்ளோஸப் ஷாட், மிட் ஷாட் என வீடியோ படமெடுத்தார்கள். அவனால் படம் எடுக்கும் பொழுது இயல்பாக சிரிக்க முடியாமல் போனதற்கும், நெற்றியில் வேர்வை வெள்ளமாய்ப் பெருக்கெடுத்ததை தடுக்க முடியாமல் போனதற்கும் வருத்தப்பட்டான்.

பிறகு அவன் கொலு மண்டபத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டான். நீள் வரிசையாக வரிசைக்குப் பத்து நாற்காலிகள் வீதம் நான்கு வரிசையாக நாற்பது பெண்கள் உட்கார்ந்திருந்தார்கள். இரண்டே இரண்டு பெண்களைத் தவிர, மற்ற எல்லாப் பெண்களும் புடைவை, மாட்சிங் ஜாக்கட், மாட்சிங் ஹேர்-பாண்ட், மாட்சிங் ஸ்டிக்கர் பொட்டுடன் இருந்தார்கள். பெண்கள் ஜரிகை வேறுபாட்டுடன் பட்டுப் புடைவை உடுத்தியிருந்தார்கள். ஒன்று ரப்பர் ஷிஃபான், இரண்டு கஞ்சி போட்ட காட்டன் புடைவை.

முதல் சுற்றின் பொழுது ஒட்டுமொத்தமாக நாற்பது பெண்களைப் பார்க்கக் கூச்சப்பட்ட ராம்குமார், கடைசி சுற்றின் பொழுது அவனுக்கு அளிக்கப்பட்டிருந்த மூன்று முறைகளையும் மீறி இன்னொரு சந்தர்ப்பம் கிடைக்காதா என ஏங்கினான். பார்க்குந்தோறும் பொலியும் பெண்கள். இதே போல் ஆடவர் அமர்ந்திருக்க, நான்கு பெண்கள் வீதம் ஒவ்வொரு வரிசையிலும் வலம் வர அனுமதித்தார்கள். ராம்குமாரை விஜியும், விஜியை ராம்குமாரும் பார்க்கும் பொழுது பரஸ்பரம் இருவரும் தலையைக் கவிழ்த்துக் கொண்டார்கள்.

அடுத்த சுற்று ஒரு பஃபே போல — சேலம் பாஷையில் கையேந்தி பவன் — சாப்பாடு ஆளுக்கு ஒரு போண்டா, பள்ளிக்கூட குழந்தைகள் கொண்டு செல்லும் ரப்பர் சைஸில்

ஒரு பர்ஃபி, பனிரெண்டு காராபூந்தி அடங்கிய பேப்பர் தட்டை கொடுத்தார்கள். ஏற்கெனவே பத்து மில்லி மீட்டர் டீயை அரைமணி நேரம் குடித்தபடி பேசி அனுபவப்பட்டிருந்த ராம்குமார் இதை ஒரு குறையாகக் கொள்ள வில்லை.

இந்த சந்தர்ப்பத்தில்தான் காலர் எலும்புப் பகுதியில் பட்டுப் புடைவை மேல் அடையாள எண் அட்டை குத்திக் கொண்டிருந்த பெண்ணுடன் பேசும் வாய்ப்பு கிடைத்தது.

"எனது எண் 108."

"எனது எண் 127" முதலில் எண்களை மனப்பாடம் செய்து கொண்டார்கள்.

"வேலை பார்க்கறீங்களா?"

"இல்லை."

"ஹவுஸ் வைஃபா இருக்கத்தான் பிடிக்குமா?"

"அது என்ன ஹவுஸ் வைஃப்னா இளப்பம்? இன்ஃபாக்ட் ஹவுஸ் வைஃப்னு ஒண்ணை உருவகம் பண்ணினா லாட்ஜ் வைஃப்னு இன்னொரு உருவகம் உண்டா?"

ராம்குமார் கிளர்ந்தெழுந்தான். காரணம் உருவகம், பின்புலம், தாக்கம் முதலிய தமிழ் பத்திரிகையில் காணக் கிடைக்காத வார்த்தைகளை அவள் பேசியது. விஜயராணி, அன்பே, என்னாங்க, கண்ணாளா லெவலை என்றும் தாண்டியதில்லை.

"என்ன வேலை பார்க்கறீங்க?"

"மெடிகல் ரெப்ரஸன்டேடிவ்" மெல்லிய குரலில் சொன்னான்.

"ஏன் தயக்கமா சொல்றீங்க?"

"நிறைய பேருக்கு 'ரெப்'புனு சொன்னா பயம் வந்துடுது!"

"நான் அப்படி இல்லை. இன்ஃபாக்ட் — அவள் இன்ஃபாக்ட் என்ற வார்த்தையை இடம் கிடைத்த பொழுது கையாண்டாள் — அதைப் போல சவால் விடும் வேலை வேறு எதுவும் இல்லை. மாசத்தில் பதினஞ்சு நாள் ஓடியாடி வேலை பண்ணிட்டா போதும். மீதி பதினஞ்சு நாள் சம்பளத்தோட ரெஸ்ட்." என நாடி பிடித்துச் சொன்னாள்.

மனைவியானவள் குடும்பப் பொண்ணாக வீட்டோடு இருப்பதில் எவ்வளவு சௌகரியம்? வேலை மாற்றல் என்னும் கொடிய ஆயுதத்திற்கு இரையாக நேராது. குழந்தைகள் பிறந்தால் காப்பகங்களில் கொண்டு தள்ள வேண்டாம். பதவி உயர்வு என்பதற்கு வேலை பார்க்காத குடும்பப் பெண் ஒரு உறுதுணையாக இருப்பாளே தவிர தடையாக இருக்க மாட்டாள்.

"இன்னும் காராபூந்தியை முழுக்க சாப்பிடலை நீங்க" என்றாள் அடையாள அட்டை எண் 127.

"இதோ ஒரு நிமிஷம்" தட்டை அவள் கையில் கொடுத்து விட்டு வேகமாக அந்த இடத்தை விட்டு அகன்றான்.

ஒரே ஒரு உறுத்தல் ராம்குமார் மனத்தில் இருந்தது. விஜயராணியைத் தேடினான். அவள் பெற்றோர் நடுவில் இருந்தாள்.

கண்ஜாடையால் அவளை அழைத்தான்.

"எங்கே அரைமணி நேரமா ஆளைக் காணும்?" — அவன் கேட்க வேண்டிய கேள்வியை விஜயராணி கேட்டாள்.

தொண்டை வறண்டு விட்டது அவனுக்கு. காதலுக்கு நீ இழைக்கப் போகும் மிகப் பெரிய துரோகம் என்றது மனச்சாட்சி. வாழ்வில் முன்னேற்றம் காண சில மெல்லிய உணர்வுகளை மிதிப்பதில் தவறில்லை என்றது, பிழைக்கத் தெரிந்த மனம். மனத்தின் சிந்தனை விரிவின் பிரும்மாண்டத்தின் முன் காலம் மிகச் சிறியது என்பதை ராம்குமார் அந்த ஒரு நிமிடத்தில் உணர்ந்தான். மனதை திடப்படுத்திக் கொண்டு, "இங்கே வா! ஒரு முக்கியமான விஷயம்" என்றான்.

"நான் கூட ஒரு முக்கியமான விஷயம் சொல்லணும்!" என்றாள் விஜி.



"முதலாளி இவரு இருபது இட்லி, பத்து தோசை, எட்டு பூரின்னு சாப்பிட்டுட்டு இப்போ காசில்லைன்னு சொல்றாரு.... அத்தனைக்கும் மாவாட்டணும்னு சொன்னா நான் கணக்கா இல்லே ஆகும்."

"அதுக்கு என்ன பண்ணலாம்கறே?"

"பேசாம 'பொது மன்னிப்பு' குடுத்து வுட்டுடலாம்னு நினைக்கறேன்."

— அகில்



# தரையில் இறங்கும் தனியார் விமானங்கள்!

இந்தியன் ஏர் லைன்ஸ் என்றாலே உடனே நினைவுக்கு வருவது அதன் ஊழியர்கள் செய்யும் திடீர் வேலை நிறுத்தங்கள். அதனால் விமான கால அட்டவணையில் ஏற்படும் குழப்படிகளும். தனியார் விமானக் கம்பெனிகள் தலையெடுத்ததும் விமானப் பயணிகளுக்கு ஒரு மாற்று கிடைக்கவே செய்தது. வியாபாரப் பெரு மக்கள் தனியார் விமானங்களின் தரமான சேவையை மனத்தில் கொண்டு தனியார் விமானங்களில் போவதையே பெருமையாக எடுத்துக் கொண்டார்கள்.

ஆனால் சமீப காலமாகத் தனியார் விமானக் கம்பெனிகளும் தரமான சேவையை அளிப்பதில் தவறி வருகின்றன. கடைசி நேரத்தில் விமானங்கள் ரத்து, மாற்று ஏற்பாடுகள் செய்யாமை அல்லது செய்வதில் தாமதம், போன்ற எரிச்சலான செயல்களைச் செய்து 'பெயர்' சம்பாதித்துக் கொண்டிருக்கின்றன.

எப்படி இந்த நிலை வந்தது? இதற்கு எல்லா தனியார் விமான கம்பெனிகளும் உடனடியான ஒரே பதிலை வைத்துள்ளார்கள். அது: 'இந்திய அரசாங்கத்தின் ஸ்திரமற்ற கொள்கை'.

போதிய அளவு அரசாங்க விமானங்கள் இல்லாதபோது, தனியார் விமான கம்பெனிகளை முதலில் இரத்தினக் கம்பளம் விரித்து வரவேற்றார்கள். அவற்றுக்கு அபரிமிதமான வரவேற்பு கிடைத்து விட, இந்தியன் ஏர்லைன்ஸை இப்போது 'பாதுகாக்கும்' பொருட்டு அரசாங்கம் பலவித கொள்கைக் குளறுபடிகள் செய்திருக்கிறது.

குறிப்பாக, அந்நிய செலாவணி கையிருப்பில் உள்ள பற்றாக்குறையைச் சுட்டிக் காட்டி, விமானங்களை நேரடியாக வாங்குவதற்குத் தடை போட்டார்கள். அங்கீகரிக்கப்பட்ட தனியார் விமானங்கள் மட்டும்தான் செய்தித் தாள்களில் தமது கால அட்டவணையை வெளியிடலாம் என்று ஒரு பக்கம் சொல்லிவிட்டு, அங்கீகரிப்பு விஷயத்தை ஆரப் போட்டார்கள். விமான நிலையத்தில் பாதுகாப்பு நியதிகளைக் கடைப்பிடிக்கவில்லை, விமான வரிகளைச் சரியாகக் கட்டவில்லை என்றெல்லாம் சொல்லி, அவ்வப்போது பலப்பல தொந்தரவுகளைக் கொடுத்து வந்தார்கள்.

விமான சர்வீஸ் என்பது அதிக முதலீடு கொண்டது. அதன் நிரந்தர நிர்வாகச் செலவுகள் மிக அதிகம். எனவே அதன் விரிவாக்கம், குறைந்த காலகட்டத்தில் படுவேகமாக எட்டி விட வேண்டும். இல்லையேல், ஏற்படக்கூடிய நஷ்டத்தைத் தாங்க முடியாது. தனியார் விமான கம்பெனிகளின் இந்த விரிவாக்க திட்டங்கள், அரசாங்க சிவப்பு நாடாக்களினால் செவிடன் காதில் ஊதிய சங்காய்ப் போனது!

"மத்திய அரசில் உள்ள ஒரு சாதாரண குட்டி ஆபீஸர் கூட ஏதாவது செய்து, எங்கள் இயக் கங்களை முடக்கிவிட முடிகிறது" என்று அலுத்துக் கொண்டார் சாஹாரா இந்தியா என்கிற தனியார் விமான கம்பெனியின் மூத்த அதிகாரி ஒருவர்.

அடுத்து ஒரு கொடுமையான விஷயம். தனியார் விமானங்கள் பம்பாய், டெல்லி, மதராஸ், கல்கத்தா போன்ற பெரு நகரங்களில் மட்டும் தமது சேவையைச் செய்யக் கூடாது. அது அதிக லாபமில்லாத ரூட்களிலும் நாற்பது சதவிகிதமாவது சேவை செய்ய வேண்டும் என்று நிர்ணயம் செய்தது இந்திய அரசாங்கம். இதுவும் இந்தியன் ஏர்லைன்ஸைக் காப்பாற்றும் முயற்சியே என்று கூக்குரலிடுகின்றன தனியார் விமான கம்பெனிகள்!

ஒரு விமானப் பயணம் லாபம் ஈட்ட வேண்டுமானால் குறைந்தபட்சம் 65 சதவீத இருக்கைகள் நிரம்ப வேண்டும். ஆனால் அதிக லாபமில்லா ரூட்களில் 35 சதவீதத்துக்கும் குறைவாகவே நிரம்புவதால், அதில் ஏற்படும் நஷ்டம் கம்பெனியின் மொத்த லாபத்தையே பதம் பார்த்து விடுகின்றது!

"ஒரு நாள் ஒரு விமானம் பறக்கவில்லை என்றாலோ, அல்லது தரையில் இறங்க சிக்னல் கிடைக்காமல் அரைமணி நேரம் வானில் வட்டமிட்டாலோ ஏற்படும் லட்சக்கணக்கான ரூபாய் நஷ்டத்தைத் தாங்க முடியாத நாங்கள் எப்படி லாபமில்லா ரூட்களில் பிழைப்பை நடத்துவது?" என்று காட்டமாகக் கேட்கிறார் என்.இ.பி.சியின் அதிகாரி ஒருவர்.

இது போன்ற நஷ்டங்களைச் சமாளிக்க இந்தியன் ஏர்லைன்ஸ் வெளிநாட்டு விமான சர்வீஸ்களை அளிக்கிறது. ஆனால் எங்களுக்கு அனுமதி மறுக்கப்படுகிறது. இது என்ன கொள்கை? ஒரு கண்ணில் வெண்ணெய், இன்னொரு கண்ணில் சுண்ணாம்பு?" என்றார் அவர்.

பொறுத்துப் பொறுத்துப் பார்த்த தனியார் விமான கம்பெனிகள், இப்போது போர்க் கொடி உயர்த்தியிருக்கிறார்கள். தங்களது கோரிக்கைகளை புதிய விமானப் போக்குவரத்து அமைச்சரான சி.எம். இப்ராஹிமிடம் கொடுத்தார்கள். அவரும் இன்னும் இரண்டு மாதங்களில் ஒரு தீர்மானமான முடிவெடுப்பதாக உறுதியளித்திருக்கிறார்.

— நடராஜன்

# மூச்சுத் திணறலில் முக்கியமாய் மூன்று!

- கிட்டத்தட்ட 49 கோடி ரூபாய் நஷ்டத்தில் மூழ்கிக் கொண்டிருந்த தமானியா ஏர்வேஸ் என்கிற தனியார் கம்பெனி 'விட்டால் போதும்டா சாமி' என்ற நிலையில், சென்னையைச் சேர்ந்த என்.இ.பி.சி. என்ற தனியார் விமான கம்பெனியிடம் தன்னை மொத்தமாய் விற்று விட்டு, ஒதுங்கிக் கொண்டது. ஸ்கைலைன் என்.இ.பி.சி. என்ற புதுப் பெயர் அதற்கு வந்தாலும், அந்தப் பழைய 'தமானியா' தன்னை நிமிர்த்திக் கொள்ள இப்போதைக்கு சாத்தியம் இல்லை என்றே தெரிகிறது.

- சென்ற மாதம் 'மோடி லுப்ட்' என்கிற தனியார் விமானக் கம்பெனிக்கு மிகப் பெரிய அடி விழுந்தது. அடி என்றால் மரண அடி! அடித்தது வேறு யாருமல்ல. அதன் பார்ட்னரான 'லுப்தான்ஸா' என்கிற ஜெர்மன் நாட்டு விமான கம்பெனி! திடீரென ஒரு நாள் லுப்தான்ஸா தன் மோடி லுப்ட் உறவை முறித்துக் கொள்வதாக அறிவித்தது. இதில் சுவாரஸ்யமான விஷயம், மோடி லுப்டின் அதிகாரிகளுக்குக் கூட இது பத்திரிகை மூலமாகத்தான் தெரிந்தது! உறவை முறித்துக் கொண்டதோடல்லாமல் வாடகைக்குக் கொடுத்திருந்த தனது மூன்று போயிங் விமானங்களைத் திரும்பப் பெற்றுக் கொள்ளப் போவதாய் அறிவித்தது! தற்போது மோடி லுப்ட் நிலைகுலைந்து போயிருக்கிறது. எல்லாம் பணத் தகராறுதான்.

- தனியார் நிறுவனங்களுள் அதிக போயிங் விமானங்கள் கொண்ட ஈஸ்ட் வெஸ்ட் ஏர்லைன்ஸுக்கும் தலைவலிகள் தொடர்கின்றன. அதன் தலைவர் குண்டர்களால் மும்பையில் சுடப்பட்ட அதிர்ச்சியிலிருந்து மீளுவதற்கு முன்பே வாடகைக்கு எடுக்கப்பட்ட மூன்று போயிங் விமானங்கள் அதன் குத்தகைக்காரர்களால் வலுக்கட்டாயமாகத் தரையில் இறக்கப்பட்டன. பணம் கொடுக்காவிட்டால் ஈட்டிக்காரர்கள் கழுத்தில் துண்டைப் போட்டுப் பிடிப்பார்களே, அதைப் போல. போதாக் குறைக்கு ஏர்போர்ட் அத்தாரிட்டியும் தன் பங்குக்கு வரி வசூலிக்க விமானங்களை முடக்கி வைத்தது. இந்தத் தொடர் நிகழ்ச்சிகள் ஈஸ்ட் வெஸ்ட்டின் கஷ்டமான காலகட்டத்தை அப்பட்டமாய்க் காட்டுகின்றன.



• பவித்ரா



• அர்ச்சனா



• அபர்ணா

யாருக்கு எவ்வித உடைகள் 'எடுக்கும்' என்பதறிந்து அணிவது நிச்சயம் கவன ஈர்ப்புக்கு வழிவகுக்கும். இங்கே சில இளவட்டங்கள், பிரபலங்களின் உடை உணர்வை விமர்சிக்கிறார்கள்:

ஷோபனா கமல்:

"உடை உணர்வுன்றது மத்தவங்களை கண்ணியமான முறையில் இம்ப்ரெஸ் செய்ய வைக்கும் ஒரு உத்தி. என்னைப் பொறுத்த வரையில் அற்புதமான உடை உணர்வு கொண்டவர் ராஜீவ் காந்தி தான். எப்பொழுதும் ஒரே மாதிரி உடை அணிபவர்களின் ட்ரெஸ் சென்ஸ் பாராட்டுக்குரியது அல்ல. ராஜீவைப் பொருத்தவரை தமிழ்நாட்டுக்கு வந்தால் வேட்டி, மணிப்பூருக்குப் போனால் அந்த மாநில உடை, இப்படிப் பலவித உடைகளை அணிந்து கொண்டாலும் அவை தனக்குப் பொருத்தமாக இருக்கும்படியும் பார்த்துக் கொண்டவர். கொஞ்சம் கூட உடை உணர்வே இல்லாதவர் நடிகர் மிதுன் சக்ரவர்த்தி தான். 'பரவாயில்லை, சுமார்...!' என்று சொல்லும்



• ராஜீவ்: ஸ்மார்ட்!

## "லல்லுவை டீ.வி.யில் பார்த்தால் நகர்ந்திடுவேன்..."

• ஜெயலலிதா: சகிக்கலை!





• சந்தியா



• ஷோபனா கமல்



• கசீனா



• ராஜன்

அளவுக்குக் கூட அவரை எந்தக் காட்சியிலும் நேர்த்தியான உடையணிந்து பார்த்ததில்லை."

அர்ச்சனா:

"மற்றவர்கள் ஒருவித எரிச்சலுடன் உற்றுப் பார்க்காத அளவுக்கு ஒருவா. எப்பொழுதும் ட்ரெஸ் செயதுக்கிறார் என்றால் அவருக்கு உடை உணர்வு உண்டுன்னு தான் அர்த்தம். இந்த விஷயத்தில் ('அந்த அரபிக் கடலோரம்' பாடலில் தோன்றும்) சொனாலி பாட்ரேவுக்கு நிகர் அவர்தான். எந்தமாதிரி உடை அணிஞ்சுக்கிட்டாலும் அவர் அசிங்கமாகக் காட்சியளிக்க மாட்டார். சமீபத்தில் அவர் இடம் பெற்றிருக்கிற "ராஹுல் அண்ட் ஐ"ன்ற ஆல்பத்தில் அவரது உடைகள் ரொம்பப் பிரமாதம். எளிமையான, அதே சமயம் பொருத்தமான உடை உணர்வுன்னா என் ஓட்டு



• ரேவதி: எளிமை+ பொருத்தம்



• சேஷன்: எளிமை



• ராமராஜன்: அலர்ஜி!



• சிந்தியா: தேசிய இமேஜ்

• தாட்சர்: அபாரம்!



பாராட்டைப் பெறுவதை விட என்னையும் சௌகரியமாக உணரவைக்கும் உடைகளை அணிவதைத் தான் நான் விரும்புவேன். டிஎன். சேஷனின் உடை உணர்வு எனக்கு ரொம்பப் பிடிக்கும். அவர் உடைகளில் நவநாகரிகமெல் லாம் எட்டிப் பார்ப்பதில்லை என்றாலும் அவை எளிமையாக- அதே சமயம் கண்ணியமாக இருக்கும். சினிமாவில் ராமராஜன் அணிந்து கொள்ளும் எந்த உடையுமே எனக்கு அலர்ஜி.

ராஜன்:

"நமக்குப் பிடித்ததை நாம் அணிய வேண்டும். மற்றவர்களுக்குப் பிடிப்பதைப் பற்றிக் கவலைப்படுவதெல்லாம் அனாவசியம். அப்படி மற்றவர்கள் விருப்பத்துக்காக உடை அணிந்து கொள்வதால் அது ட்ரஸ் சென்ஸ் கிடக்கட்டும் - சென்ஸே இல்லாத செயல் என்பது என் கருத்து! ஆனால் நான் இப்படிச் சொல்வது இளை ஞர்களுக்குத்தான். உயர்ந்த பதவியில் உள்ள வி.ஐ.பி.க் களுக்கல்ல. மார்க்கரெட் தாட்சரின் ட்ரெஸ் சாய்ஸ் அபாராம். அவரைப் பார்த்தாலே ஒருவித மரியாதை தோன்றுவதற்கு அவரது உடை நேர்த்தியும் ஒரு காரணம். நடிகையாக இருந்தபோது எப்படியோ, முதல்வரானபிறகு ஜெயலலிதா அணியும் உடையும், அதற்கு அவர் தேர்ந் தெடுக்கும் வண்ணங்களும் சகிக்கவில்லை எனக்கு."

நடிகை ரேவதிக்குதான்.

சந்தியா:

"உறவினர் வீட்டுக் கல்யாணத்துக்காக நீண்ட தூரம் ரயிலில் போக வேண்டி யிருந்தது. சௌகரியத்துக்காக ஜீன்ஸ் அணிந்து கொண்டிருந் தேன். அந்த கிராமத்தில் இறங் கியதும் அங்கு சிலர் என்னை ஏதோ வேற்றுகிரக ஜந்து போல் பார்த்தார்கள். உடை உணர்வு என்பது ஆளுக்கு ஆள் வேறு படலாம் என்பதற்காக இதைச் சொல்கிறேன். மற்றவர்களின்

சுசீலா:

"'நமக்கும் பிடித்திருக்கிறது. மற்றவர்களையும் உறுத்தாது' என்கிற அளவில் உடைகள் அமையும்போது அவை மனத்தில் ஏற்படுத்தும் தன்னம்பிக்கையே அலாதிதான். அப்படிப்பட்ட நாட்களில் 'தொட்டதெல்லாம் க்ளிக்காகும். ஒனிடா வாஷிங் மெஷின் மற்றும் விபுல், குப்தாஸ் சாரிஸ் விளம்பரங்களில் இடம்பெறும் தீப்தி பட்நாகரின் கச்சிதமான உடை உணர்வைப் பார்த்து பிரமித்திருக்கிறேன். இதற்கு நேரெதிர் இந்தி நடிகர் கோவிந்தா. மிகவும் 'காடி'யாகவும், பாண்ட்டுக்கும் சட்டைக்கும் பொருத்தமே இல்லாமலும் திரையில் தோன்றி தலையில் அடித்துக்கொள்ள வைப்பார் அவர்.



• லல்லு: நகர்ந்துடுவேன்!

அபர்ணா:

"தலைமுறை இடைவெளி பளிச்சுன்னு தெரியற முக்கியமான விஷயமே உடைகள் தான். பெரியவங்க வற்புறுத்தலுக்காக மட்டும் குறிப்பிட்ட உடையை நாம அணிஞ்சோம்னா மனசு சுருங்கிப் போகும். மானத்தைக் காக்க மட்டுமில்லே, மனத்தை மகிழ்ச்சியாக வச்சுக்க உதவுவதும்தான் உண்மையான உடை உணர்வு. வி.ஐ.பி.க்களில் மாதவ்ராவ் சிந்தியாவின் உடைகளுக்குத்தான் என் வோட்டு. நம் தேசிய இமேஜைப் பளிச்சுன்னு கண் முன்னே நிறுத்தும் உடை அது. லாலு பிரசாத்தை டீ.வியில் பார்த்தாலேயே டக்குனு நான் நகர்ந்துடுவேன். பொருத்தமேயில்லாத உடையைத்தான் அவர் எப்பவும் போட்டுக் கொள்கிறார்!"

தொகுப்பு : ஜி.எஸ்.எஸ்.

படங்கள் : பேஜர் கே. மூர்த்தி.

# ஆஹா..ஹாஹாஹா...













– இந்தியன் ஃபீச்சர்ஸ் சிண்டிகேட்



# கனவுக்கன்னி

தெலுங்கு ஜனங்களின் ரசனை மாபெரும் புதிர். கே. விஸ்வநாத், ராம்கோபால் வர்மா எனச் சிலரும் வெல்கிறார்கள். இந்தப் படத்து ராகவேந்திரராவ் போலவும் சிலர்!

கடலில் மூழ்கிய பழங்காலக் கப்பல், அது நிறையத் தங்கம், அபகரிக்கத் துடிக்கும் வில்லன், தேவைப்படும் கடல் கன்னியின் உதவி, ஒரு சூன்யக்காரி, மீனவ ஹீரோ, ஹீரோவைக் காதலிக்கும் கடல் கன்னி என்று நூறு சத அம்புலிமாமாக் கதை.

யாரோ மென்று துப்பி, காலில் ஒட்டி உசிரை வாங்கும் சூயிங்கம் மாதிரி சகிக்க ஒண்ணா நகைச்சுவை. நொடிக்கொரு சண்டை, சண்டை முடிந்த கையோடு ஒரு கோஷ்டி கானம் என்று மிகப் பல ஹிம்சைகள்.

இருந்தாலும் அங்கே இங்கே அசையாமல் படம் பார்க்க முடிகிறதென்றால், அது எங்ஙனம்?

புண்ணியவதி ஷில்பாஷெட்டி உபயம். இங்கத்திய நடிகைகளிடம் காணக் கிடைக்காத ஒருமாதிரி உருகும் ஐஸ்கிரீம் தோற்றம். அசைவுகளில் ஒரு லாகவம். புன்னகையில் மின்சாரம். அந்த நடனமாடுகிற நேர்த்திக்கு சொத்தில் பாதி எழுதி வைத்து விடலாம் என்று ரசிகர்களுக்குத் தோன்றினால் வியப்பில்லை.

(சமீப காலத்தில் இத்தனை பொருத்தமான டைட்டில் வேறு எந்தப் படத்துக்கும் இருந்ததாக ஞாபகமில்லை. திரை முழுக்க, முழுக்க, முழுக்க ஜில், ஜில், ஜில்ப்பா)

சகட்டு மேனிக்கு செலவு பண்ணி, கடலடி செட்டெல்லாம் போட்டிருக்கிறார்கள். கலர்க்கலராகப் பின்னணிகளில் என்னென்னவோ கம்ப்யூட்டர் சமாசாரங்கள். இருட்டடிக்காத, பளிச்சென்று டார்ச் அடித்தாற் போல ஒளிப்பதிவு.

ஒட்டாத விஷயம் கதை மட்டும்தான். தண்ணீரில் இருந்தால் இடுப்புக்குக் கீழே மீன் தோற்றம். தரைக்கு வந்தால் அதுவே இரண்டு ட்யூப்லைட் மாதிரியான கால்கள் ஆகிவிடுமாம். (ஆடிப்பாட அதானே வசதி?)

கடல் கன்னியின் காதலை கனவுப் பாடல்களில் மட்டும் ஏற்கிற ஹீரோ, வெங்கடேஷ். இதர தெலுங்கு நடிகர்களை விடவும் கொஞ்சம் கூடுதல் துடிப்பு இருக்கிறது இவரிடம்.

ஆனால் உணர்ச்சிமயமான காட்சிக்கெல்லாம் லாயக்கில்லை.

பாருங்கள், கிளைமாக்ஸ் சண்டையெல்லாம் முடிந்து, தர்மத்தை நிலை நாட்டிவிட்டு, பூமி மக்களிடம் விடைபெற்றுக் கொண்டு, கடல் கன்னி மீண்டும் கடலுக்குப் போகப் போகிறாள், சோகத்தோடு.

தியேட்டர் முழுக்க உச்சுக் கொட்டி, தாய்க்குலங்கள் கண்ணீர் மல்கி விடை கொடுக்க, திரையில் வெங்கடேஷ் மட்டும் புத்தர் மாதிரி போஸ் கொடுக்கிறார்!

திகட்டத்திகட்ட ஷில்பாவுடன் ஆடிப் பாடியதில் அலுப்பு வந்து விட்டதோ என்னவோ.

கன்னிக்காக மட்டும் பார்க்கலாம்!

**- ஆர்.பி.ஆர்.**

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

# உங்கள் கதவுகளை தேர்ந்தெடுக்க சரியான வழி

**MOISTURE REDUCTION**
( New Wood contains 80% - Desirable Level 14% to 18% )

**CHEMICAL PROTECTION**
(By Pressure Impregnation)

## மாயூரம் டிம்பர்

அதை சிறப்பான முறையில் செய்து கொடுக்கிறது



### சிறப்பம்சங்கள் :

- உன்னதமான மெஷின் தயாரிப்பு
- விற்பனைக்கு பின் தரமான சேவை
- 50 வருடங்களுக்கும் மேலான அனுபவம்.

ஆர்டரின் பேரில் கதவுகள் செய்ய அணுகவும் :

## மாயூரம் டிம்பர் டிரேடிங் கம்பெனி

83, ஜி.எஸ்.டி. ரோடு, தாம்பரம், சென்னை - 600 045.
போன் : 2368297 / 2368295 / 4345207.

REGISTERED NO.TN/MS (S) M 4392 Registered as Newspaper in Srilanka
Licensed to post without prepayment under licence No. TN/MS (S) 161